# திருத்தில்லை நிரோட்டக யமக அந்தாதி

## மூலமும் உரையும்



பதிப்பாசிரியர்



புலவர். வ. ஞானப்பிரகாசம்



உ

சிவமயம்

# திருத்தில்லை நிரோட்டக யமக அந்தாதி

## (மூலமும் உரையும்)

ஆசிரியர் :

தில்லைவிடங்கன்

வெண்பாப்புலி சு. வேலுச்சாமிப்பிள்ளை

உரையாசிரியர் :

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

மகாகவி முருகேச பண்டிதர்

பதிப்பாசிரியர்

சித்தாந்த ரத்தினம், சைவத்தமிழ்ப்புலவர், நல்லாசிரியர், சிவநெறித் திருத்தொண்டர், விரிவுரை வித்தகர், ஆய்வுரைத் திலகம், சிவத்தமிழ்ச்செல்வர், இலக்கியச் செம்மல், கற்பனைக் களஞ்சிய நம்பி

புலவர். வ. ஞானப்பிரகாசம்

வெளியீடு

அருள்வடிவேலன் பதிப்பகம்

43, சிங்காரவேல்நகர்,

வண்டிப்பாளையம் அஞ்சல்,

கடலூர் - 607 004.

திருச்சிற்றம்பலம்

உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் அடியேனுன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய் பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே.

– மாணிக்கவாசகர்.

திருச்சிற்றம்பலம்.

---

## நூல் பற்றிய விபரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | திருத்தில்லை நிரோட்டக யமக அந்தாதி |
| தன்மை | : | பக்தி இலக்கியம் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பாசிரியர் | : | **புலவர். வ. ஞானப்பிரகாசம்** |
| நூற்பதிப்பு | : | முதற்பதிப்பு - 30 டிசம்பர் 2009<br>(மார்கழி திருவாதிரையை முன்னிட்டு) |
| உரிமை | : | பதிப்பாசிரியருக்கு |
| தாள் | : | சேசஷாயி 11.6 சூப்பர்பைன் |
| அச்சு | : | 11 புள்ளி |
| பக்கங்கள் | : | 64 |
| விலை | : | **ரூ. 25.00** |
| வெளியீடு | : | அருள்வடிவேலன் பதிப்பகம்<br>43, சிங்காரவேல் நகர்,<br>வண்டிப்பாளையம் அஞ்சல்<br>கடலூர் - 607 004. |
| அச்சகம் | : | சுபம் பிரிண்டர்ஸ்,<br>76/1, சுப்பிரமணியம் தெரு,<br>சிதம்பரம் - 608 001<br>பேசி : 04144 - 232544, 230646. |

உ

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

உ

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்ப்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

- ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

திருவருள் தூண்டுதலின் வண்ணம், தில்லையைப் பற்றிய பழைய இலக்கியங்களை உரையோடு வெளியிடும் என் முயற்சியில், 14 ஆவது நூலாக, திருத்தில்லை நிரோட்டக யமக அந்தாதி என்னும் நூலை உரையோடு மார்கழித் திருவாதிரையில் வெளியிடுகின்றேன்.

அண்மையில் அடியேன், திருவாவடுதுறை ஆதீனம் சரஸ்வதி மஹால் நூலகம் சென்று தில்லையைப் பற்றிய பழைய நூல்களைத் தேடிய நிலையில் இந்நூல் கிடைத்தது. அந்நாளிலேயே குருமகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்து, திருவடி பணிந்து, இந்நூலை வெளியிட அனுமதி வேண்டிய போது, குருமகா சந்நிதானம் அவர்கள் மிகவும் மகிழ்ந்து, வெளியிட அனுமதி தந்து, அருளாசி வழங்கியருளினார்கள்.

தாயினும் சாலப் பரிந்து இன்னருள் பொழியும் **சீர் வளர்சீர் குருமகா சந்நிதானம் அவர்களின்** பொன்னார் திருவடிகளை நாளும் வணங்கி மகிழ்கின்றேன்.

திருத்தில்லை நிரோட்டக யமக அந்தாதி ஆகிய இந்நூல் தில்லைவிடங்கன் சு. வேலுச்சாமிப்பிள்ளை அவர்கள் செய்தது. தில்லைவிடங்கன் என்னும் ஊர் சிதம்பரத்திற்கும் கிள்ளைக்கும் இடையில் அமைந்த சிற்றூராகும். இந்நூலுக்கு உரை எழுதியவர் யாழ்ப்பாணத்துச் சுன்னாகாம் மகாகவி முருகேச பண்டிதர் ஆவார். திருவாவடுதுறை ஆதீன சரஸ்வதி மஹால் நூல் நிலைய நூலகராக இருந்த திரு தா.ப. வேங்கட சுப்பிரமணியம் அவர்கள் தம் இளவயதில் தம் தந்தையிடம் பாடம் கேட்டதை 60 ஆண்டுகள் கழித்து மூலத்தையும் உரையையும் நினைவுக்குக் கொண்டு வந்து 30.09.1971 ல் பதிப்பித்துள்ளார்கள். 21 வது குருமகா சந்நிதானம் அவர்களின் நான்காவது ஆண்டுக் குருபூசை நினைவு மலராக ஆதீனத்தின் 264 வது வெளியீடாக இந்நூல் வெளிவந்துள்ளது. இந்நூலை அப்படியே பதிப்பித்துள்ளேன். நூலின் பின்பகுதியாக **திருத்தில்லை சிவகாம சௌந்தரியார் தோத்திரம்** பதினொரு பாடல்கள் அமைந்துள்ளன. இதற்கு உரையில்லை. பாடல்களின் எளிமை கருதி உரைஎழுதாமல் விட்டிருக்கலாம். ஆனால் இன்றைக்கு உரை தேவை என்பதனால் அடியேன் உரை எழுதி உள்ளேன். நூலாசிரியர் வரலாற்றைத் திருப்புலியூர் வெண்பா உரையாசிரியர் வரலாற்றிலிருந்து எடுத்துத்தந்துள்ளேன்.

எளியேனின் நூல் வெளியீட்டுப் பணிக்குத் தமிழகம் முழுமையும் பல அன்பர்கள் தொடர்ந்து உதவி வருகின்றனர். அனைவரையும் நன்றியோடு வணங்கி மகிழ்கின்றேன்.

**இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க**

43, சிங்காரவேல் நகர்,
கடலூர் 607 004.
செல் : 94421 28214.

அன்பன்
**வ.ஞானப்பிரகாசம்**
23.12.2009

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்





திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
23-ஆவது குருமகாசந்நிதானம்
**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக**
**பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**
திருவாவடுதுறை - 609 803, நாகை மாவட்டம்
தொலைபேசி எண். 04364 - 232021

நாள் : 26.12.2009

# "அருள் வாழ்த்துரை"

**நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க**
**இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க**
**கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க**

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே.

- சம்பந்தர் தேவாரம்.

தில்லைத் திருத்தலம் குறித்த பக்தி இலக்கியங்களைத் தொடர்ந்து வெளியிட்டுவரும் சிவத்தமிழ்ச் செல்வர், புலவர் வ. ஞானப்பிரகாசம் அவர்கள் நமது ஆதீனப் பதிப்பாக 1971 - ஆம் ஆண்டு

வெளிவந்துள்ள **திருத்தில்லை நிரோட்டக யமக அந்தாதி** – மூலமும் உரையும் என்னும் நூலினை மறுபதிப்பு செய்து வெளியிட உள்ளமை அறிந்து மகிழ்ச்சி அடைகின்றோம்.

பின் இணைப்பாக இந்நூலில் உள்ள **திருத்தில்லைச் சிவகாமசௌந்தரியார் தோத்திரம்** என்ற பதிகத்திற்குப் பதிப்பாசிரியர் அவர்களே உரையும் எழுதியுள்ளமை பாராட்டத்தக்கது.

அன்பர்கள் இந்தச் சிறந்த சைவத் தமிழ் இலக்கியத்தினை உரையுடன் கற்றுப் பயன்கொள்ள வேண்டும். புலவர் வ. ஞானப்பிரகாசம் அவர்களின் சிவத்தொண்டுகள் மேன்மேலும் தழைத்துச் சிறந்திட வேண்டுமென நமது வழிபடு கடவுளாகிய அருள்மிகு ஞானப்பெருங்கூத்தன் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.



**1.4.2008 - இல் சிவத்தமிழ் செல்வர் விருது வழங்கி அருளாசி வழங்கி அருளல்.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முகவுரை

"உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவாய் யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவா யருள்வாய் குகனே."

- கந்தரனுபூதி.

அமிழ்தினும் இனிய செந்தமிழ் மொழியில் உள்ள தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் அந்தாதியும் ஒன்றாகும். முதற்செய்யுளின் இறுதிக்கணின்ற எழுத்தேனும் அசையேனும் சீரேனும் சொல்லேனும் அடியேனும் வருஞ்செய்யுளின் ஆதியாக வருவதும் நூலின் ஈற்றுச் செய்யுளின் ஈற்றிலுள்ள சொல் நூலின் முதற்செய்யுளின் முதலாக அமையப் பாடப்படுவதும் அந்தத்தை ஆதியாக உடையது ஆதலின், அந்தாதி எனப்படும். இவ்வந்தாதி செய்யுள்வகையால் பலவகைப்படும்.

செய்யுளின் ஒவ்வொரு அடியிலும் இரண்டெழுத்து முதல் பன்னிரண்டெழுத்து வரை ஒன்றிவரப் பாடப்படுவது யமகம் என்றும், இதழ் குவிவாய்ப் பிறக்கும் எழுத்துக்கள் தொடராது முடிக்கும் கவி நிரோட்டகம் என்றும் கூறப்படும். நிரோட்டகத்தை மிறைக்கவி எனவும் கூறுவர். (மிறைக்கவி என்பது சித்திரக்கவி). அருட்கவியாளர்களால் நிரோட்டக யமகவந்தாதிகளும், யமக அந்தாதிகளும் பல பாடப்பெற்றுள்ளன. நிரோட்டகத்தில் ஒரே அடிபோல் நான்கடியும் வரப் பாடப்பெற்றதான ஏகத்தாளிதழகலந்தாதிகளும் உள. ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள், ஸ்ரீமத் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், திருவையாறு திரு. இராமசாமி அய்யர், தில்லைவிடங்கன்

ஸ்ரீ சு. வேலுச்சாமிப் பிள்ளை முதலிய பலர் பல நிரோட்டக யமகவந்தாதிகள் பாடியுளர்.

ஸ்ரீமத் தண்டபாணிசுவாமிகள் ஸ்ரீ சிவபெருமான் ஏகத்தாளிதழகலந்தாதி, திருச்செந்தூர் ஏகத்தாளிதழகலந்தாதி முதலியன கூறியுள்ளார். ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் திருச்செந்தில் நிரோட்டக யமகவந்தாதியும், திருவையாறு ஸ்ரீ இராமசாமி ஐயர் திருவையாறு நிரோட்டக யமகவந்தாதியும் பாடியுள்ளார்கள். திருத்தில்லை நிரோட்டக யமகவந்தாதியைப் பாடியவர் திருப்புலியூர்ச் சிலேடைவெண்பாப் பாடிய பேரருளாளராகிய தில்லைவிடங்கன் பரம்பரைச் சைவவேளாண் மரபிலுதித்தவரும், பதினெட்டாம் நூற்றாண்டிலே விளங்கியவருமாகிய ஸ்ரீமாரிமுத்துப்பிள்ளை அவர்களின் பௌத்திரனுக்கும், பௌத்திரிக்கும் பௌத்திரராகிய வெண்பாப்புலி ஸ்ரீ சு.வேலுச்சாமிப் பிள்ளை எனும் பெரியோராவர். இவர் திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான் திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களை வித்தியா குருவாகக் கொண்டு முறையே கல்வி கற்றவரும், திருவாவடுதுறை ஆதீனத்து 16-வது குருமகாசந்நிதானமாய் விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகபரமாசாரிய சுவாமிகளிடத்து சமய தீக்ஷையாதி பெற்றவருமாவர். இந்நூலில் குருமரபு வணக்கமுங் கூறி நூல் தொடங்கியுள்ளார்.

இவ்வந்தாதிக்கு உரை செய்த பெரியார் இயாழ்ப்பாணத்துச் சுன்னாகம் வித்வசிரோன்மணி ஸ்ரீ பூ.முருகேசபண்டிதரவர்களாவர். மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சி சுந்தம்பிள்ளையவர்களின் மாணவராகிய ஸ்ரீ தி.க.பெரியணப்பிள்ளையவர்களிடத்தும், சுன்னாகம் ஸ்ரீ பூ. முருகேச பண்டிதரவர்களிடத்தும் முறையே இலக்கண இலக்கியாதிகளும், இயாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களின் மாணவராகிய ஸ்ரீ தர்க்கக் குடாரதாலு தாரியாரவர்களிடம் தருக்க நூலும் முறையே பாடங்கேட்டவரும் எனது தந்தையருமாகிய குடந்தை வித்துவான் ஸ்ரீ து.பஞ்சநத

ஐயரவர்களிடம் 1911ம் ஆண்டில் நேமத்தான்பட்டி ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் வித்தியாசாலையில், மூன்றாம் வகுப்பில் படிக்கும்போது பாடமுறையில் கேட்ட நிரோட்டக யமக அந்தாதிகளில் திருத்தில்லை நிரோட்டக யமக வந்தாதியும் ஒன்றாகும்.

இவ்வந்தாதி 1891-ம் ஆண்டில் சென்னை வெ.நா.ஜுபிலி பிரஸ்ஸில் அச்சாகியிருக்கிறது. யான் பாடங்கேட்கும் காலத்திலேயே அச்சுப்புத்தகம் கிடைப்பது அரிதாகிவிட்டது. யான் குருபரம்பரையில் பாடமுறையில் கேட்டதை சிந்தனைக்குக் (நினைவுக்கு) கொண்டு வந்து எழுதி திருவாவடுதுறை ஆதீனத்திலே இருபத்திரண்டாவது குருமகாசந்நிதானமாக வீற்றிருந்து சிவஞானச் செங்கோலோச்சி சிவாலய குராலய பரிபாலனங்களும், தண்டமிழ்ப் பரிபாலனமும் செய்து மிக்க பெருங் கீர்த்தியுடன் விளங்கிவரும் சிவஞான தானவள்ளலாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் அவர்களின் திருக்கண்ணோட்டத்திற்கு அளித்தேன். ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் உத்திரவுப்படியே விரோதிகிருது புரட்டாசி மீ பரணி நாளிலே 21-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக மூர்த்திகள் நான்காவது ஆண்டுக் குருபூஜை நினைவு மலராக அச்சிட்டு வெளியிடப்பெறுகின்றது.

அறுபதாண்டுகட்கு முன்பு பாடங்கேட்டதை இப்போது நினைவுக்குக் கொண்டுவந்து எழுதியுள்ளேன். இதில் ஏதேனும் குற்றங் குறைகளிருப்பின் ஆன்றோர்கள் பொறுத்தருளுமாறு கேட்டுக்கொள்ளுகின்றேன்.

இங்ஙனம்,
(திருப்புகழ்)
**தா.ப.வேங்கடசுப்பிரமணியம்**
சரஸ்வதி மஹால் நூல்நிலையம்
திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை
30-9-1971

உ

# நூலாசிரியர் வரலாறு

திருப்புலியூர் வெண்பா எழுதிய தில்லைவிடங்கன் மாரிமுத்துப் பிள்ளை என்பவரின் பௌத்திரனுக்கும் பௌத்திரிக்கும் பௌத்திரராகிய வேலுச்சாமிபிள்ளை என்பவர், தில்லை நிரோட்டக யமக அந்தாதியைச் செய்தவர் ஆவார். இவர் இவ்வாதீனத்து மகாவித்துவான், திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய மாணவர். இதனை, ''பிள்ளையவர்களோடு கூடப் படித்த ஒருசாலை மாணாக்கராகிய சென்னை அஷ்டாவதானம் சபாபதி முதலியார் தம்மிடம் படித்துக் கொண்டிருந்தவரும், தில்லைவிடங்கன் மாரிமுத்தாபிள்ளையின் பரம்பரையினருமாகிய வேலுச்சாமி பிள்ளை என்பவரை மேலும் நன்றாகப் படிப்பிக்க நினைந்து தமக்கும் பிள்ளையவர்களுக்கும் உள்ள சிநேகபாவத்தைப் புலப்படுத்தி, ''இவரைப் படிப்பித்து முன்னுக்கு வரச்செய்ய வேண்டும்'' என்று ஒரு கடிதம் எழுதிக் கொடுத்து அனுப்பினார். அவர் வந்து இவரை வணங்கி அக்கடிதத்தைத் கொடுத்தனர். அதைப் பார்த்துவிட்டு இவர் அவரை அங்கீகரித்து அப்படியே பாடம் சொன்னார். நாளடைவில் அவருடைய கல்வி மிகப் பெருகியது. இவரிடத்திற் படித்தமையாற் கவித்துவ சக்தியும் நன்றாக அவருக்கு உண்டாயிற்று. பெரும்பாலும் வெண்பாவே பாடுவார். பாடுவதில் கஷ்டம் என்று சொல்லப்படும் அந்தப்பாவை விரைவாகப் பாடுவதைத் தெரிந்து உடன் படிக்கும் மாணாக்கர்கள் **வெண்பாப்புலி** என்று அழைப்பாராயினர். அதுவே பின்பு அவருக்குரிய பட்டப்பெயராகவும் அமைந்து வழங்கலாயிற்று. அவர் பிற்காலத்தில் காஞ்சிபுரம் ஹைஸ்கூலில் தமிழ்ப் பண்டிதராக இருந்தனர்.'' (ஸ்ரீமத் ஐயரவர்கள் பிள்ளையவர்கள்

சரித்திரத்தில் எழுதியிருத்தல் காண்க) இவர் பிள்ளையவர்களிடம் பாடங்கேட்ட காலம் (1872-1875) ஆங்கிரஸ முதல் யுவ-தைமாதம் வரை ஆகும். பிள்ளையவர்கள் சிவ பதமடைந்த தினத்தைப் புலப்படுத்தி இவர்,

''மன்னும் யுவவருட மாதந்தை முன்பக்கம்
உன்னும் பிரதமைமா லோணநாள்-மின்னும்
துருவுபுகழ் மீனாட்சி சுந்தரநம் மேலோன்
திருவுருவ நீங்கு தினம்''

என்னும் வெண்பாவை இயற்றினார் என்பர்.

திரு. வேலுச்சாமிப்பிள்ளை அவர்கள் திருப்புலியூர் வெண்பா நூலின் பாடல்களுக்குச் சரியான பாடங்கொண்டு பதஉரையும் விளக்கக் குறிப்புகளும் எழுதி 1888 ல் ஐந்தாம்பதிப்பாக வெளியிட்டுள்ளார்.

இவர் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த அடியவரும், பிள்ளையவர்களின் மாணவருமாகலின் இவ்வாதீன குரவர்களிடத்துள்ள குருபத்தியை இந்நூலில் தீட்சாகுருவணக்கம் வித்யாகுரு வணக்கம் பாடி நன்கு விளக்கியுள்ளார்.

தம் ஆசிரியர் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் திருத்தில்லை யமக அந்தாதி எனும் நூலைப் பாடியதனால் இவரும் அதுபோலப் பாட வேண்டும் என்ற ஆசையினால் திருத்தில்லை நிரோட்டக யமக அந்தாதியைப் பாடியிருக்கலாம்.

இவர் தில்லைக் கற்பக விநாயகர் மும்மணிக்கோவை செய்துள்ளதாக இந்நூல் உரைக்குறிப்பிலிருந்து அறிந்துகொள்கிறோம். இன்னும் என்ன என்ன நூல்கள் செய்துள்ளாரோ?

# உரையாசிரியர் வரலாறு

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம் தமிழ்ப்புலவர்கள் பலர் தோன்றுவதற்கு இடமாக விளங்கிய பெருமையை உடையது. முதன்முதல் சுன்னாகத்தில் தோன்றிய தமிழ்ப்புலவர் காசிமாநகரினின்றும் வந்து குடியேறிய அரங்கநாத ஐயர் மகன் வரதபண்டிதராவர். அவர் வடமொழி தென்மொழியாகிய இரு மொழிகளிலும் சிறந்த பாண்டித்தியம் பெற்றுப் பெரும் புலவராகத் திகழ்ந்தனர். சிவராத்திரிப் புராணம், கிள்ளைவிடு தூது, அமுதாகரம் முதலிய பல அரிய நூல்களை இயற்றியவரும் அவரே, அவருக்குப் பின் முத்தகக் கவி பாடுவதில் வித்தகராகிய முத்துக்குமார கவி ராஜரவர்கள் 1780ல் தோன்றி, ஞானக்கும்மி ஏசுமத பரிகாரம் முதலிய பல அரிய நூல்களை இயற்றிப் புகழ் படைத்தனர். 1924-ம் ஆண்டில் தோன்றிய வடமொழிப் புலவர் நாகநாத பண்டிதரவர்கள் இதோபதேசம் முதலிய பலநூல்களை இயற்றினார். 1829-ம் ஆண்டிற்றோன்றிய சங்கரபண்டிதரவர்கள் வடமொழி தென்மொழி என்னும் இருமொழிகளிலும் வல்லுநராய்ச் சைவப்பிரகாசனம், சப்த சங்கிரகம் முதலிய அரிய நூல்கள் இயற்றிச் சைவத்துக்கும் தமிழுக்கும் பெருந்தொண்டாற்றினர். அப்புலவர் வரிசையில் ஐந்தாவது பெரும்புலவராக விளங்கியவர் மகாகவியாகிய முருகேச பண்டிதராவர். அவர் யாழ்ப்பாணத்திலும், தமிழ் நாட்டின் பல பாகங்களிலும் தன்னிகரில்லாத் தனிப் பெரும் புலவராக விளங்கியவர். கும்பகோணம் வைத்தியநாத தேசிகரவர்கள் அவரது கவிதாசக்தியை வியந்து "தோமறு தமிழ்ச்சொன்மாரி தொலைவின்றிப் பொழியு மேகம்" என்று கூறிய செய்யுட் பகுதியும் அவர் பெருமையைப் புலப்படுத்துகின்றது. சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களுள் இலக்கிய இலக்கண அறிவு

நிரம்பப்பெற்ற பெரும்புலவர் முருகேச பண்டிதர் என்பது கூறாதே அமையும்.

## தோற்றம்

முருகேச பண்டிதரவர்கள் யாழ்ப்பாணத்துச் சுன்னாகத்தில் சைவவேளாண் குலத்தில் உதித்த பூதப் பிள்ளை அவர்களுக்கும், அவர் மனைவி உமைநாச்சி யம்மையாருக்கும் அருந்தவப் புதல்வராக 1829-ஆம் ஆண்டு தோன்றினார். அவருடைய தந்தையார் சயம்புடையாருடைய மகன் சிற்றம்பலம் என்பவரின் புத்திரராவர். கல்வியறிவிற் சிறந்தவராதல் பற்றி அவர் 'சட்டம்பியார்' பூதப்பிள்ளை என்று யாவராலும் அழைக்கப்பட்டார். பண்டிதருடைய தாயார் வேதாரணியப் புலவர் மகன் சுப்பிரமணியர் என்பவரின் புத்திரியாவார். தாய் மரபுந் தந்தை மரபுந் தமிழ்க் கல்வி வளம்பொருந்திய தாதலின் முருகேச பண்டிதர் இயல்பாகவே தமிழ்க்கல்வியில் அதிக ஊக்கம் காட்டினார். பண்டிதருடன் உடன்பிறந்தார் சுப்பிரமணியர், கதிர்காமர், நன்னியம்மை என்னும் மூவராவர். மூத்த தமையனாராகிய சுப்பிரமணியர் என்பவர் பாடசாலையில் கற்கும்போதே கிறீஸ்தமதம் புகுந்து 'பிச்' (fitch) எனும் நாமமும் பூண்டு கிறீஸ்த போதகராய் இலங்கையிலும் இந்தியாவிலும் உத்தியோகம் பார்ப்பாராயினர். மற்றையோர் வேளாண் தொழிலைக் கடைப்பிடித்து சீருஞ் சிறப்போடும் வாழ்ந்தனர். அவர்களுடைய சந்ததியார் இன்றும் சிறப்போடு வாழ்கின்றனர்.

## இலக்கணக்கொட்டர்

முருகேச பண்டிதர் தமது இளமைக் காலத்தில் அவ்வூர்வாசியாகிய சிவசங்கரபண்டிதரிடம் சித்தாந்த தருக்க சாஸ்திரங்களை முறையே கற்றார். அவ்வாறு கற்றமையோடமையாது மேலும்மேலும் கற்கவேண்டும் என்னும்

அவாமேலீட்டினால் உடுப்பிட்டிச் சிவசம்புப் புலவரை அடைந்து பஞ்சலக்கணங்களையும், பாரதம், இராமாயணம் முதலிய நூல்களையும் ஐயந்திரிபறக் கற்றுத்தேறினர். அவரது பஞ்சலக்கணத் தேர்ச்சியையும் கவியியற்றுந் திறமையையும் யாவரும் மெச்சுவாராயினர். புன்னை வித்துவ சிரோமணி கணேசையர் அவர்கள் முருகேச பண்டிதருடைய கல்வி அறிவை வியந்து "எழுத்தொடு சொற்பொருள் யாப்பணி யென்னுமிலக்கணங்கள்; பழுத்துள நாவினன்" என்று புகழ்ந்து இருக்கின்றனர். பேசும்போதும் எழுதும்போதும் கவியாத்தலிலும் பண்டிதரவர்கள் இலக்கணவழுக்கள் விரவாத நடையைக் கையாளும் வழக்குடையர். பிறர் எழுதும் நூல்களைத் துருவித்துருவி ஆராய்ந்து அவற்றிற் காணப்படும் இலக்கண வழுக்களைப் பத்திரிகைகள் மூலம் எழுதி வெளிப்படுத்தியும் வந்தனர். அவருடைய இலக்கணவன்மையை நன்கு அறிந்து எல்லோரும் அவரை "இலக்கணக் கொட்டர்" என்று கூறினர்.

## கற்பித்த இடங்கள்

முருகேச பண்டிதருடைய கவிகள், கட்டுரைகள், பிரசங்கங்கள் அவருடைய புகழை எங்கும் பரவச் செய்தன. யாழ்ப்பாணத்தின் பல பாகங்களிலுமிருந்து மாணவர்கள் வந்து அவரிடம் பாடங்கேட்டுச் சென்றனர். முதலில் சுன்னாகத்து மயிலணியில் ஓர் பாடசாலையைத் தாபித்து மாணவர்களுக்குத் தமிழ்க்கல்வி கற்பித்தனர். அக்காலத்தில் அவரிடம் பாடங்கேட்ட மாணவர்களுள் சுன்னாகம் குமாரசாமிப் புலவர், ஊரெழு சரவணமுத்துப் புலவர், மானிப்பாய் முத்துத் தம்பிப்பிள்ளை ஆகிய மூவரும் சிறந்தவராவர். சில காலத்திற்குப்பின் அவர் யாழ்ப்பாணத்திலுள்ள பல விடங்களுக்குஞ் சென்று மாணவர்களுக்குப் பாடஞ் சொல்லிக்கொடுத்து வந்தார். அவர்

யாழ்ப்பாணத்தில் கற்பித்த இடங்களைப் பின்வரும் சுன்னாகம் குமாரசாமிப் புலவர் பாட்டால் அறியலாம்.

"சுன்னைநகர் புன்னைநகர்
சொல்லியதென் கோவைநகர்
மன்னுசிறுப் பிட்டியள
வெட்டியொடு மல்லாகம்
துன்னியகல் வளைமுதலாம்
தொன்னகர்வாழ் மாணவர்க்குப்
பன்னுதமிழ் சொன்னவன்மன்
முருகேச பண்டிதனே"

## இந்தியா சென்றது

1878 ம் ஆண்டு பண்டிதருடைய வாழ்க்கையில் எதிர்பாராத மாற்றங்கள் ஏற்பட்டன. அவருடைய மனைவி கதிராசியம்மையார் கதிர்காம யாத்திரைக்கு அவரோடு சென்று திரும்பும்போது நோய்வாய்ப்பட்டு இறந்தனர். பண்டிதருக்குப் பிள்ளைகளும் இல்லை. நெருங்கிய சுற்றத்தவரோடிணங்கி வாழ்ந்து பிற்காலத்தைச் சுன்னாகத்திற்கழிக்கும் கருத்தும் அவரிடம் இல்லை. குடும்பப் பிணக்குகளும் அவருடைய மனஅமைதியைக் குலைத்தது. சைவத்துக்கும் தமிழுக்கும் உறைவிடமாக விளங்கும் தமிழ் நாட்டில் தமது பிற்காலத்தைக் கழிப்பது உசிதமெனத் தீர்மானித்துக் கொண்டு 1878 ம் ஆண்டு அங்கு பிரயாணமானார். அவர் இந்தியாவில்; கும்பகோணம், சென்னை, சிதம்பரம், காஞ்சீபுரம், சேலம், திருப்பாற்றூர் முதலிய இடங்களில் இருபத்திரண்டு வருட காலம் கல்வி கற்பித்துக் கொண்டும், நூல்கள் இயற்றிக்கொண்டும் காலம் கழித்தனர்.

# தியாகராசச் செட்டியாரைத் திகைக்க வைத்தது

முருகேச பண்டிதர் முதலில் கும்பகோணஞ்சென்று ஆசிரியராக வேலைபார்க்கக் கருதி ஆங்குள்ள உயர்தரப்பாட சாலையில் தமிழ்ப்பண்டிதர் வேலை காலியாக இருப்பதைக் கேள்விப்பட்டு அவ்வேலைக்கு மனுப்பண்ணினார். மனுப் பண்ணியவர்கள் அநேகராய் இருந்தமையால் அவர்கள் எல்லோரையும் தமிழ்ப் பண்டிதர் தியாகராஜ செட்டியாரைக் கொண்டு பரீக்ஷிப்பித்து வேலை கொடுப்பதாக கும்பகோணம் கல்லூரி அதிபர் கோபாலராவ் தீர்மானித்தனர். ஆறுமுக நாவலரை வெல்லக்கருதிய அவர் தமது ஐம்பதாவது வயதில் தியாகராசச்செட்டியாரது எழுத்துப் பரீக்ஷைக் கிருப்பதென்பது அவருக்கு மிக்க வெறுப்பை உண்டு பண்ணியது. உத்தியோகக் கவர்ச்சியினால் தூண்டப்பட்டவராய்ப் பல பண்டிதர்களோடும் பரீக்ஷைக்குப் போயினர். கேள்விப்பத்திரம் கொடுக்கப்பட்டது. கேள்விப்பத்திரத்தில் உள்ள இலக்கணப் பிழைகளைக் கீறி, தக்க நியாயங்களுங்கூறி, கேள்விகேட்கும் முறையையும் ஒரு பாட்டிலமைத்துத் தியாகராசச் செட்டியார் கேள்விப்பத்திரம் தயாரிக்கத் தகுதியற்றவரென்பதையுங் குறித்துத் தமது விடைப்பத்திரத்தை எல்லோருக்கும் முன்னர்க் கொடுத்துவிட்டுச் சென்றனர். தியாகராசச் செட்டியார் பண்டிதருடைய விடைகளைவாசித்து அவருடைய பஞ்சலக்கணத் திறமையைக் கண்டு திகைத்துப்போயினர். கோபாலராவ் பண்டிதருடைய மதிநுட்பத்தை வியந்து அவரையே பண்டிதவேலையில் அமர்த்தினர். அப்பாடசாலையில் எட்டு வருடங்கள் வரையில் வேலை பார்த்தனர்.

## நூல்கள்

முருகேச பண்டிதர் யாழ்ப்பாணத்திலும் இந்தியாவிலும் பல நூல்களை இயற்றியுள்ளார். அவை சந்திர சேகரப்பிள்ளையார் ஊஞ்சல், பூதராயர் ஊஞ்சல், மயிலணிச் சுப்பிரமணியர் ஊஞ்சல், மயிலணி மகா விஷ்ணு ஊஞ்சல், வத்தாக்கைஅம்மன் ஊஞ்சல், மயிலணி விசாலாட்சி அம்மன் பதிகம் (1877), குடந்தை வெண்பா (1882) மயிலணிச் சிலேடை வெண்பா, பதார்தத தீபிகை. நீதி நூறு (1886) முதலியன.

## நூற்றிறன் முதலியன

யாழ்ப்பாணத்தில் வசித்த சிறந்த புலவர்களுள் ஆசுகவியாக விளங்கிய முருகேச பண்டிதரவர்களே சிறந்தவரென்பது மிகையாகாது. எவ்விஷயத்தைப் பற்றியும் உடனே கஷ்டமின்றிச் செய்யுளியற்றும் வன்மைமிக்கவர். அவர் இயற்றிய நூல்கள்தோறும் புராண வரலாறுகளும், சாஸ்திர உண்மைகளும் மலிந்து விளங்குகின்றன. பாக்களில்வரும் கற்பனைத் திறமையும். கருத்துப் பெருமையும், கவித்துவமும், பிறநயங்களும் படிப்போருக்கு இன்பமும் பக்தியும் அளிக்கவல்லன. பண்டிதரியற்றிய ஊஞ்சல்கள், அனுப்பிராசங்கள் அமைந்து ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் கொண்டு விளங்குகின்றன. குடந்தை வெண்பா, நீதி நூறு, மயிலணிச்சிலேடை வெண்பா என்னும் நூல்கள் வெண்பாக்களினால் ஆக்கப்பட்டவை. குடந்தை வெண்பாவில் வரும் ஒவ்வொரு வெண்பாவிலுமுள்ள முதல் இரண்டடிகளில் தல மகிமையை அடக்கிப் பின் இரண்டடியிலும் மடக்கமையப் பாடப்பட்டிருக்கிறது. இந்நூல் கும்பகோணம் வைத்தியநாத

தேசிகர், சுன்னாகம் குமாரசாமிப்புலவர், மானிப்பாய் முத்துத்தம்பி பிள்ளை, கும்பகோணம் சபாபதிச்செட்டியார், இராகவஐயங்கார், உடுப்பிட்டிச் சிவசம்புப்புலவர் என்பவர்களுடைய சிறப்புப் பாயிரங்களோடு 1882-ல் வெளிவந்தது. நீதிநூறு கவிச் சிறப்பினாலும் பொருட் சிறப்பினாலும் நீதிநெறி விளக்கத்திற்கு இணையாக விளங்குகின்றது. அறம்பொருள் இன்பம் முதலியன இந்நூலில் பொதிந்து விளங்குகின்றன. இக்காலத்தில் இதுபோன்ற நூலை இயற்றவல்லவர்கள் அரியரென்பது மிகையாகாது. மயிலணிச் சிலேடை வெண்பாவில் இருபத்தொரு பாக்கள் மாத்திரம் கிடைத்தன. பதார்த்த தீபிகை பண்டிதரது தருக்க நூலுணர்ச்சியை நன்கு புலப்படுத்துகின்றது. இது தருக்க நூலில் கூறப்படும் விஷயங்கள் எல்லாவற்றையும் எழுபத்தெட்டுக் கலித்துறைப் பாக்களில் அடக்கிச் சிறப்பாக இயற்றப்பட்டிருக்கின்றது.

## தோற்றம் குணம் முதலியன

பண்டிதர் தோற்றத்தாற் கரியவர், உருவத்தாற் சிறிது குறுகிய பருகிய உடலமைப்புடையவர். அவருடைய சரீர பௌதிக நிலைமைக்குக் காரமான உணவு அதிகம் வேண்டியிருந்தது. அவர் சாப்பிடும்போது அரைத்த மிளகாய்த்திரள் ஒன்றைத் தின்னும் வழக்குடையவர். தலை முழுகும்போது மிளகாய் அரைத்துத் தலைக்குத்தப்பி முழுகுவரென்றும் அக்காரணம்பற்றி அவரை அவர் மாணாக்கர் "மிளகாய்ச் சட்டம்பியார்" என்று அழைப்பது வழக்கம் என்றும் கூறுவர். அவர்மிக்க கோபமும் வெடுவெடுப்பான பேச்சுமுடையவர். புலமை நிரம்பாதாரியற்றும் நூல்களிற் காணுங் குற்றங்களை இலங்கை நேசன், உதயபானு முதலிய பத்திரிகைகள் மூலம் கண்டிப்பவர். கண்டனமூலம்

பிழைபட எழுதின புலவரை வெல்ல முடியாதாயின் அவரைப் பகிரங்க வாதுக்கழைப்பவர். அவரோடு வாதுபுரிய எவரும் அஞ்சுவர், நீதிக்கும் உண்மைக்குமன்றி வேறொன்றுக்கும் அஞ்சாதவர். சுயநலத்திற்காகத் தமது பெருமையையும் பண வருவாயையும் மதித்துப் பிறருக்குப் பணியாதவர். எல்லா நன்றியிலுஞ் செய்ந்நன்றியைச் சொல்லிலும் செயலிலும் மறவாதவர். தமது ஆசிரியர்களை மறவாது தாம் இயற்றும் நூல்கள் ஒவ்வொன்றிலும் ஆசிரியர் வணக்கம் கூறும் வழக்கமுடையவர்.

## இறுதிக்காலம்

பண்டிதருடைய வயோதிக காலம் திருப்பாற்றூரிலே கழிந்தன. உடல்மெலிவுற்றபோதிலும் நூல்களியற்றுவதிலும், கல்வி கற்பிப்பதிலும் சோர்வின்றியிருந்தனர். வெள்ளைய நாடாரவர்கள் அவருக்கு வேண்டிய வசதிகளை ஏற்படுத்தினபடியால் அவர் மனவமைதியோடு இறுதிக்காலத்தை ஒரு குறையுமின்றிச் சந்தோஷமாகக் கழித்தனர். அவர் கடவுள் பக்தி மிக்கவராய்ச் சுப்பிரமணிய உபாசகராய் விளங்கினர். உடல்வலிமை வரவரக் குன்றினதின் காரணமாக அவர் 1900ம் ஆண்டு விகாரி வருஷம் ஆவணி மாதம் 10-ம் தேதி தேக வியோக மாயினர். இவரது உடலம் சகல சிறப்புக்களோடும் சமாதிவைக்கப்பட்டது. பண்டிதரின் பூத உடல் மறைந்து விட்டாலும் அவருடைய புகழுடம்பு என்றும் அழியாது நிலைக்கும் என்பதிற் சந்தேகமில்லை.

---

குறிப்பு: மேற்கண்டவரலாறு சுன்னாகம் ஸ்ரீ கு.முத்துக் குமாரசாமிப்பிள்ளை அவர்கள் குறிப்பிலிருந்து சுருக்கி எழுதப்பட்டன.



## பதிப்பாசிரியருக்குக் கிடைத்த பாராட்டுகள்

| | |
|---|---|
| இலக்கியச் செம்மல் | - தமிழ் இயக்கம், கடலூர். 17.6.1990 |
| இலக்கியச் செம்மல் | - திருக்குறள் பீடம், குருகுலம், குருபழநி ஆதீனம், மதுராந்தகம். 7.3.2001 |
| நல்லாசிரியர்<br>ஒரு பவுன் தங்கக் காசு | "வாழ்விக்க வந்த வான் பொருள்" கட்டுரைப்போட்டியில் முதல் பரிசு, ரெட்டியப்பட்டி சுவாமிகள் அறக்கட்டளை, சென்னை-17. 9.11.1997 |
| சிவநெறித் திருத் தொண்டர் | - கொங்கு மண்டலம் அப்பரடிகள் சிவனடியார் திருக்கூட்டம், விசயமங்கலம், ஈரோடு. 30.4.2006 |
| ஞானியாரடிகள் விருது<br>ரூபாய் 2000 பணமுடிப்பு | கடலூர் தமிழ்ச்சங்கம் 2006 |
| கற்பனைக் களஞ்சிய நம்பி | - மயிலம் பொம்மபுர ஆதீனம், சென்னை சிவப்பிரகாசர் செந்தமிழ் உயர்ஆய்வுமையம். 27.9.2007. |
| ஆய்வுரைத் திலகம், 26.12.2007. | - வள்ளலார் திருச்சபை, வேட்டவலம், திருவண்ணாமலை மாவட்டம். |
| பாராட்டு<br>நினைவு | - JCI. கடலூர் மற்றும் VGK அறக்கட்டளை 14.12.2007 |
| பாராட்டு | - கடலூர் மத்திய அரிமா சங்கம் 2001 ஆசிரியர் தின விழா |
| பாராட்டு - 12.8.2007 | - செங்குந்தர் மகாசன சங்கம், கடலூர் |
| சிவத்தமிழ்ச்செல்வர் 1.4.2008 | - குருமகாசந்நிதானம் அவர்கள் திருவாவடுதுறை ஆதீனம் |
| பாராட்டு - 8.9.2008 | - கடலூர் மத்திய அரிமா சங்கம் |
| விரிவுரை வித்தகர்- 1.10.2008 | - சன்மார்க்க சங்கம், சிறுவாச்சூர், பெரம்பலூர் மாவட்டம். |

உ

சிவமயம்

தில்லைவிடங்கன்

**சு.வேலுச்சாமிப்பிள்ளை அவர்கள்**

இயற்றிய

# திருத்தில்லை நிரோட்டக யமகவந்தாதி

## மூலமும் – உரையும்

*காப்பு*

**முல்லையந் தாதி வரற்குழன்**
**மேவரன் முன்னம்பொன்னாக்**
**கல்லையந் தாதி வரற்கருள்**
**வோனருள் கற்பகஞ்சொல்**
**இல்லையந் தாதி னவைமுத**
**லாயவை யின்றிநன்றாத்**
**தில்லையந் தாதி செயவடி**
**காட்டிநற் சீர்தருமே.**

இதன்பொருள்: முல்லை தாது இவர் அல்குழல்-முல்லைப்பூவினது மகரந்த மேறப்பெற்ற இருள் போலுங் கூந்தலையுடைய ஸ்ரீ சிவகாமித்தாயார், மேவு அரன்-விரும்புகின்ற சங்கார கருத்தாவும், முன்னை கல்லை பொன் ஆ-முற்காலத்திலே கல்லைப்பொன்னாகச் செய்து, அம் தாதி வரற்கு-அழகிய பரவைநாச்சியாருக்கு நாயகராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு, அருள்வோன்-கொடுத்தருளியவருமாகிய ஸ்ரீ நடேசப்பெருமான், அருள்-பெற்றருளிய, கற்பகம்-கற்பகமென்னுந் திருநாமத்தையுடைய ஸ்ரீ விநாயகர், சொல்லில்-பெயர்ச் சொல்லில் வரும், ஐயம்-

சந்தேகத்தையும், தாதில் - வினைச்சொற் பகுதியில் வரும், நவை முதலாயவை - குற்ற முதலியவற்றையும், இன்றி-இல்லாமலொழித்து, தில்லையந்தாதி-திருத்தில்லை நிரோட்டக யமகவந்தாதியை, நன்றாக-சுத்தமாக, செய-அடியேன்பாட, அடி-திருவடிகளை, காட்டி - தரிசிப்பித்து, நல்சீர் தரும்-சிறப்பு மிகுந்த சீரினைத் தருவார் என்றவாறு.

இது மூவகை வாழ்த்துள் மனத்தால் காண்டலென்னும் வஸ்து நிர்த்தேசம். பாடத்தக்க வலிமை தமக்கின்றெனினும், செங்கல்லைப் பொன்னாக்கித் தம்மடியவர்க்கருளிய ஸ்ரீ சிவபெருமான் குமாரர் அஃதருளவல்ல ரென்பார், "முன்னங் கல்லையந் தாதிவரற் கருள்வோனருள் கற்பகம்" என்றார்; என்னை? தந்தையின்வலிமை மைந்தருக்கும் உண்டென்பது கருதி. மேலும் கற்பக மென்னுங் குறிப்பேதுவானும் இஃதமையும். இதன் விரிவை, இந்நூலாசிரியர் இயற்றிய

"பூதலத்தாரம் புலியூர் மேலைக்,
கோதலத்தாரங் கோபுரமேவி,
யிருக்கையானு முருக்கிளர் தருவார்,
கவடு மொண் கொம்புங்கவின்கொள் மொற்குழையு,
மேவுகண்மலரு மேவலானுஞ்சீ,
ரெண்ணிய வெண்ணியாங் கீகையானுங்,
கற்பகமென்றே கருதுபு சார்ந்தனன்."

எனவரும் தில்லைக்கற்பக விநாயகர் மும்மணிக் கோவையாலறிக. தாது: வடமொழி. உகரம்: தொகுத்தல்.அம்: சாரியை. ஆகவென்பது, ஆ எனவாயது கடைக்குறை. செய்து: சொல்லெச்சம். சொல்லிலையம்: விரித்தல். இன்றி: செயப்படுபொருள்கொண்டு, தரும் என்பதின் முதனிலையோடு முடிந்த செய்து என்னும் வாய்ப்பாட்டுக் குறிப்பு வினை வினையெச்சம். இது செயப்படு பொருளுடையதாக

வருதலை, "மலைவு இல்லார்" என்பதற்கு மலைவு இல்லையாகச் செய்தவர் என்று திராவிடமாபாடியகாரருரையிலும் வருதல் அறிக. நன்மை: இங்கே மிகுதியென்னும் பொருள்தரும் உரிச்சொல். இவ்வாறே "நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்" எனச் செய்யுள் வழக்கினும் "நல்ல மழை நல்ல வெயில்" என உலக வழக்கினும் வருதல் காண்க. தாதுவென்னும் விதப்பால் சொற்குச் சிறப்புப்பற்றிப் பெயரென்றாமேனும் ஏனையவுங்கொள்க. இனி சொல்லில்வரும் ஐயமாவன: துவாரத்தை யுணர்த்துவது, துளையோ, தொளையோ எனவும்; ஊருவை யுணர்த்துவது, துடையோ தொடையோ எனவும் மயங்குதல் போல்வன.

தாதுவில் வருங்குற்றமாவன: சிவந்தான் என வருமிடமெல்லாம், செவந்தான் எனத் திருத்தி மயங்குதல் போல்வன.

### தீக்ஷாகுரு வணக்கம்

**வருமா தவஞ்செய் பவர்சேர்**
**துறைசை வரன்வரைத்த**
**வருமா தவனெனும் வார்கணை**
**யும்வரை வள்ளல்வெற்பி**
**வருமா தவனென வாழ்த்துவெ**
**னென்றன் மனத்திருள்க**
**வருமா தவன்சுப் பிரமணி**
**யகுரு வானவனே.**

இ-ள்: என் தன் மனத்து இருள் கவரும் ஆதவன் - என்னுடைய உள்ளத்தின்கட் பிரியாது கிடந்த அவித்தை என்னும் இருளைக் கவர்ந்து கொண்ட ஞான சூரியராகிய, சுப்பிர மணிய குருவானவனே – சுப்பிரமணிய தேசிக சுவாமிகளே, (உம்மைநாயேன்) வரும் மாதவம் செய்பவர் சேர் துறைசை வரன் - திருக்கைலாய முதலிய பல விடங்களிலுமிருந்து வந்த மகா தபஸ்விகள் சேர்ந்து

வாழ்கின்ற திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கின்ற சிரேட்டரே யென்றும், வரை தவரும் - மேருமலையாகிய வில்லையும், மாதவன் எனும் வார்கணையும் - மகா விஷ்ணுவென்கின்ற நீண்ட அஸ்திரத்தையும், வரை வள்ளல் - நீங்கிய வள்ளலேயென்றும், வெற்பு இவர் உமாதவன் என - மலையிற்பிரிந்திருந்த உமாதேவிக்கு நாயகரே யென்றும், வாழ்த்து வென் - (அகக்கரணஞ் சுத்தியாகத்) தோத்திரஞ் செய்வேன் என்றவாறு.

தீக்ஷையில் அவித்தை களையப்பட்டிருப்பினும் மொண்டு கொண்டு வினைவாயிலாக வந்து தாக்கும் மலினவாதனையை அகற்றுவான் கூறினாரென்பது கருதி 'அகக்கரணம் சுத்தியாக' என வருவித்துரைத்தாம். பாவம் இடையூறாகலின்.

## வித்தியாகுரு வணக்கம்

**செந்தாதி யானந் திகழ்தில்லை வாணற்குச் செய்யமக**
**வந்தாதி யானருண் மீனாட்சி சுந்தர வத்தனற்றாள்**
**சந்தாதி யானன் கருச்சனை செய்து தயங்குபொருள்**
**நந்தாதி யானவி லந்தாதி நூனல நல்கிடுமே.**

இ-ள்: செந்தாது யானம் திகழ்தில்லை வாணற்கு-பொன் விமானங்கள் விளங்காநின்ற தில்லை வாணராகிய ஸ்ரீநடேசப்பெருமானுக்கு, செய் யமக அந்தாதியான்-பாடிய திருத்தில்லை யமகவந்தாதியை யுடையவராகிய, அருள்-கருணையையுடைய, மீனாட்சி சுந்தர அத்தன்-மீனாட்சி சுந்தரம்பிள்ளை என்னும் ஆசிரியருடைய, நல்தாள்-நன்மையாகிய பாதங்கள், சந்து ஆதியால்-சந்தன முதலியகொண்டு, நன்கு அருச்சனை செய்து-தம்மை நன்றாகப்பூசித்து, யான் நவில் அந்தாதி - யான்பாடுகின்ற அந்தாதிக்கு, தயங்குபொருள் நந்தாது - விளங்குகின்ற பொருளாற் கேடுபடாமல், நூல்நலம் நல்கிடும் -

(உயர்ந்தோர்) நூலை யொத்துச் சொல்லும் நலத்தைக் கொடுக்கும் என்றவாறு.

இந்நூலாசிரியர் தமது ஆசிரியரிடத்தே செய்த மிக்க வழிபாட்டால் பெற்ற பேரருளைத் தாமுடையாராயினாரென்பார் அவரது திருநாமத்தின்முன், அருள் எனயாத்தும், வழிபாடு புரிந்து அவ்வருளைப் பெறுதற்கு வாயிலாக நின்றன பாதங்களாதலால் நற்றாளென்றுங் கூறினார். தான் செய்யக் கருதிய காரியத்திற்கேற்ப "செந்தாதி யானந் திகழ்தில்லை வாணற்குச் செய்யமக வந்தாதியான்" என விசேடித்தும், குருவாயன்றிப் பிதாவையொத்தும் விளங்குதலில் 'அத்தன்' என இரட்டுற மொழிதலாற் சுருக்கியும் கூறினார். அந்தாதிநூல் - என்பதைப் பண்புத் தொகையாக்கிக் குவ்வுருபை விரித்து நலத்தை நல்கிடுமென உரைப்பினும் அமையும்.

## நூல்

**ஆனந்த னாடகத் தான்றில்லை யானடி யார்க்கெளியன்**
**ஆனந்த னாடகத் தான்யாணர் செய்யரங் கன்றென்றிசை**
**ஆனந்த னாடகத் தான்யா ளியினார்த் தடையினஞ்சேன்**
**ஆனந்த னாடகத் தான்சர ணேநல் லரணெனக்கே. 1**

இ-ள்: ஆனந்தன்-ஆனந்தத்தையுடையவரும், நாடகத்தான்- (பஞ்சகிருத்திய காரணமாகிய) திருக் கூத்தையுடைய வரும், தில்லையான் - திருத்தில்லை நகரத்தையுடையவரும், அடியார்க்கு எளியன் - அடியவருக்கு எளியவரும், ஆன் அந்தன்-இடபவாகனத்தையுடைய அழகரும், ஆடகத்தான் யாணர் செய் அரங்கன்-பொன்னால் அழகு பெறச் செய்யப்பட்ட சபையையுடையவரும், ஆல் நந்தன்- ஆலிலையிற்றுயின்ற நந்தராகிய விஷ்ணுமூர்த்தியும், நாடு அகத்தான்- ஆராய்ந்து பெற விரும்புகின்ற (மேலான) இடத்தையுடையவருமாகிய ஸ்ரீ

நடேசப் பெருமானுடைய, சரணம் ஏ-திருவடிகளே, எனக்கு-அடியேனுக்கு, நல்அரணம்-நன்மையாகிய காவலிடமாகும், தென்திசையான்-தென்திசைக் காவலனாகிய யமன், நந்து அ நாள்- இறக்கின்ற அந்த நாளிலே, தகத்தான்-மன வெப்பத்தோடு, யாளியின்-சிங்கம்போல, ஆர்த்து-முழங்கி, அடையின்-என்னிடத்தடைவானாயின், அஞ்சேன்-பயப்படேன் என்றவாறு.

சரணம். அரணம் இவ்விரண்டும் கடைக்குறைந்து நின்றன.

கருத்துரை: கால காலனாகிய ஸ்ரீநடேசப்பெருமானுடைய திருவடிகள் தனக்குப் புகலிடமாக இருத்தலின், காலனுக்கு அஞ்சேனெனல். ஆனந்த நாடகத்தான் சரண். ஆல் நந்தன் அகத்தான் நாடு சரண் எனக் கூறினுமமையும்.

**அரனந்தி யானந்தி யானய னாதிய ரந்தையைக்காய்**
**அரனந்தி யானந்தி யானர்கட் கீதில்லை யான்கடியய்**
**அரனந்தி யானந்தி யான நிறத்தி னனைந்திசைநீ**
**அரனந்தி யானந்தி யானஞ் செயநன் றளித்தனனே. 2**

இ-ள்: அரன்-சங்கார கருத்தரும், நந்தி-கெடாத மகிழ்வுடையவரும், ஆனந்தியான்-ஆனந்தியாகிய ஸ்ரீ சிவகாமித்தாயாரை உடையவரும், அயன் ஆதியர்-பிரமன் முதலிய தேவருடைய, அந்தையை-அகங்காரமாகிய இரும்பை, காய்-தேய்க்கின்ற, அரம்-அரம்போன்றவரும், நந்துயானம் தியானர்கட்குஈதில்லையான் - (ஒளிமிகுந்த) விமானங்களைச் சிவயோகத்தையுடையவர்கட்குக் கொடுக்கின்ற திருத்தில்லை நகரத்தை யுடையவரும், கடிஅயர் அ நந்தியான் - காவலைப் புரிகின்ற அந்த நந்திதேவரை யுடையவரும், அந்தி ஆன நிறத்தினன் - செவ்வானம் போன்ற நிறத்தினையுடைய வருமாகிய

ஸ்ரீ நடேசப் பெருமான், ஐந்து இசை-பஞ்ச விஷயங்களிற் பொருந்துகின்ற, தீயர்-பொறிகளாகிய தீயர்களுடைய, அல்-மயக்கத்தினால், நந்து-கெடுகின்ற, யான்-அடியேன், அம் தியானம் செய-அழகிய தியானம் செய்யும் பொருட்டு, நன்று அளித்தனன் - நன்மை புரிந்தனர் என்றவாறு.

க-ரை: ஐம்பொறிகளி னலையுதலின்றி யொருங்க நன்மைபெற்றமை கூறல். 2ம் அடியில், அரன்: போலி, ஐந்து: தொகைக் குறிப்பு.

**அளித்தாரை யாகத் தரசற்கண்**
**ணாக்கதி யைக்கனிந்தே**
**அளித்தாரை யாகத் தரந்தெரிந்**
**தேத்தி ரகிலத்திர்நீர்**
**அளித்தாரை யாகத் தரண்டில்லை**
**யார்நிதி யைக்கனந்தான்**
**அளித்தாரை யாகத் தரநினை**
**சீலத் தறிஞர்க்கன்றே.** 3

இ-ள்: அகிலத்திர்நீர் - உலகத்தவரே நீங்கள், அளி தார் ஐ யாகத்து அரசற்கு-குளிர்ச்சியாகிய மாலையைத்தரித்த அழகு பொருந்திய யாகாதிபதியாகிய இந்திரனுக்கு, அண்ணா கதியை-(அனுபவித்தற்குக்) கிட்டாத மோட்சத்தின் பொருட்டு, கனம் - மேகம், ஆர்-நிறைந்த, நிதியை-பொன்னை, அளி தாரை-வண்டையொத்த கண்ணையுடைய இலக்குமியைத் தரித்த, ஆகத்தர்-மார்பினையுடையவராகிய விஷ்ணுமூர்த்தி, அண்- (ஆனந்த வசப்பட்டு) அண்ணிய, தில்லை-திருத்தில்லை நகரத்தில், அளி-முகந்து, தாரை ஆக-மழைத் தாரையாக, தர-தரும்படிக்கு, நினை-தியானித்த, சீலத்து அறிஞர்க்கு-தவவொழுக்கத்தை யுடையவராகிய முனிவருக்கு, கனிந்து ஏ-கனிவுகொண்டு, அளித்தாரை-அருளியவராகிய ஸ்ரீ

நடராஜப் பெருமானை, ஆகம்-உடம்பினது, தரம்தான்-(நிலைமையாகிய) நிலையை, தெரிந்து-பிரத்தியக்ஷத்திற்றெளிந்தும், ஏத்திர்-ஏத்தாதிருக்கின்றீர், (உமது ஒழுக்கம் இருந்தவாறென்னை என்பது குறிப்பெச்சம்) என்றவாறு.

அள்ளி என்பது அளி எனவந்தது இடைக்குறை. அன்று, ஏ-அசைச் சொற்கள்.

க-ரை: இருமையும் நன்மை உதவவல்ல ஸ்ரீ நடேசப் பெருமானை, அகிலத்தவர் வணங்காமையைக் குறித்து இரங்கல்.

**அரியா யிரங்காய் தலைநேர்ந் திலங்கரங் கன்கணசை**
**அரியா யிரங்காய் செறிதெங் கண்டில்லை யிலந்தகரை**
**அரியா யிரங்கா யிழைசெய றேர்ந்தர னையயற்கே**
**அரியா யிரங்கா யெனத்தாழ்ந் தகற்றீ ரணங்கினையே. 4**

இ-ள்: அரி ஆயிரம்-ஆயிரம் சூரியர், காய்தலை-பிரகாசித்தலை, நேர்ந்து-ஒத்து, இலங்கு-விளங்குகின்ற, அரங்கன் கண்-பொற்சபையை யுடையவராகிய ஸ்ரீநடேசப் பெருமானிடத்தே, நசை-வைத்த விருப்பத்தினாலாகிய, அரி-குற்றத்தை, ஆயிர்-ஆயாதீராகி, அம் காய்-நீரையுடைய காய்கள், செறி-பொருந்தப் பெற்ற, தெங்கு அண் தில்லையில்-தென்னைகள் பொருந்திய திருத்தில்லை நகரத்திலே, அங்கு-வெறியாடுகளத்தில், அம்-அழகாகிய, தகரை- ஆட்டுக்கடாவை, அரி-வெட்டத்தொடங்கிய, ஆயிர்-தாயர்களே, ஆய் இழை-தலைவியினது, செயல் தேர்ந்து-செய்கையை ஆராய்ந்து தெளிந்து, அரனை- ஸ்ரீ நடேசப் பெருமானை, அயற்கு ஏ அரியாய்-பிரமனுக்கும் எட்டுவதற்குக் கிட்டாதவரே, இரங்காய் என-இரங்கி அருள்கவென்று, தாழ்ந்து-அவரைப் பணிந்து, அணங்கினை அகற்றீர்-துன்பத்தை நீக்குமின் என்றவாறு.

ஏ-ஈற்றசை

அஃதன்றி இவ்வாறு பயனில் தொழில்புரிய முயலாதீர் என்பது எஞ்சிநின்றது. ஆயிர் முற்றாகத்திரிந்த எச்சம், (சுத்தாவத்தையின் காரியங்களை அசுத்தாவத்தையின் காரியங்களென மயங்காது நிறுத்தல் என்னும் வெறிவிலக்கு)

க-ரை: ஆன்மா சீவபோதமற்று சிவபோதத்தில் திளைத்து நிற்கும் நிலையை உணராது பலி கொடுப்பதால் பயனில்லை என்பதாம்.

**அணங்காய நங்கை யலர்த்த**
**நினைநினை யங்கயற்கண்**
**அணங்காய நங்கை யலறக்**
**கலைநல் லணிநெகிழ**
**அணங்காய நங்கை யலரி**
**னெரிந்ததென் றாய்ந்தறியான்**
**அணங்காய நங்கைய னெய்தனன்**
**சீர்த்தில்லை யங்கணனே.** 5

இ-ள்: சீர்தில்லை அங்கணனே-சிறப்பாகிய திருத்தில்லை நகரத்தில் எழுந்தருளிய ஸ்ரீ நடேசப் பெருமானே, அணங்கு-துன்பத்தைத் தருகின்ற, ஆயம்-மகளிர் கூட்டம், நங்கை அலர்த்த-பழிச் சொற்களைப் பரவச்செய்ய, நினை-உம்மை, நினை-நினைக்கின்ற, அம்-அழகாகிய, கயல்-கயல்போலும், கண்-கண்ணையுடைய, அணங்கு-தெய்வப்பெண்ணை, ஆய-ஒத்த, நங்கை-தலைவி, அலற-பெருங்குரலிட்டுப்புலம்ப, கலை-வஸ்திரமும், நல்அணி-நல்ல ஆபரணங்களும், நெகிழ-நீங்க, அள்-(வலிமையினால்) நெருங்கிய, நம்காயம்-நம்முடைய தேகம், நம்கை அலரின்-நம்முடைய கையம்பினால், எரிந்தது என்று-எரி

கொளுவியதென்று, ஆய்ந்து அறியான்-ஆராய்ந்து அறியானாகி, அணங்காய்-அச்சமுண்டாக, அனங்கன் ஐயன்-மன்மதனாகிய பெரியோன், எய்தனன்-பாணங்களை யெய்தான் ஆதலால் வருத்தம் நீங்கும்படி விரைந்து அனுக்கிரகம் செய்க என்றவாறு.

'சொற்றிரியினும் பொருள்திரியா வினைக்குறை' என்றதனால், ஆக என்பது ஆய் எனத் திரிந்து நின்றது. அநங்கன் ஐயன்-அனங்கையனென்றாயது; இதற்கு 'சில விகாரமா முயர்திணை' என்பதனை விதியாகக் கொள்க.

க-ரை: தாபத்திரயத்தால் வருந்திய உயிர்த்தலைவிக்கு அருள்புரிவான் தலைவனை நோக்கி யருட்டாய் கூறியது.(அருள் +தாய்)

**அங்கயி லாய கிரியாயந் நாளிற்கா ணாச்சரண்கண்**
**அங்கயி லாய கிரியாசிற் சத்தி யரனளைஇ**
**அங்கயி லாய கிரியாத்த கேசத்த ரார்தில்லையான்**
**அங்கயி லாய கிரியானெற் கேகாட்டி யாண்டனனே. 6**

இ-ள்: அம் கு அயில் ஆய-சலஞ் சூழ்ந்த பூமியை உண்ட கிருஷ்ணாவதாரத்தையுடைய விஷ்ணுமூர்த்தியே, கிரியாய்-நீ வராகமாகி, அ நாளில் காணா சரண்-அக்காலத்திற் காணாத திருவடியை, கண்- கண்ணானது, அயில் ஆய-வேற்படையை ஒத்த, கிரியாசிற்சத்தி அரன்-கிரியா சத்தியையும் சிற்சத்தியையுமுடைய அரனும், அகிர் அளைஇ-அகிற்புகை ஊட்டி, கையில் ஆய்-கையினால் வகிர்ந்து, யாத்த-முடிக்கப்பட்ட, அம் கேசத்தர்-மேகத்தை ஒத்த கூந்தலையுடைய மகளிர், ஆர்-நிறைந்த, தில்லையான்-திருத்தில்லை நகரத்தையுடையவரும், அம் கயிலாய கிரியான்-அழகிய கைலாசகிரியை உடையவருமாகிய ஸ்ரீ நடேசப்பெருமான், எற்கு ஏ-அபக்குவனாகிய அடியேனுக்கு, காட்டி-தரிசிப்பித்தருளி, ஆண்டனன்- அடிமைகொண்டனன் என்றவாறு.

அவனருள் இருந்தபடி என்னை? எனக்கே அதிசயந்தருமென்பது எஞ்சி நின்றது. கயில், அகிர் என்பன போலி. அகிர் அளைஇ எனப் பொருட்கிணங்க மொழி மாற்றியுரைக்கப்பட்டது. பிறவினை விகுதி விகாரத்தாற் றொக்கது. ஆய் முதனிலைத் தனிவினை வினையெச்சமாகி யாத்தவென்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது. இதனை இலக்கணக்கொத்திற் கூறிய "முதனிலைத் தனிவினைக் குணமொழி குறினே" என்னுந் தொடக்கத்துச் சூத்திரவுரையிற் காண்க. அங்கு, ஏ-அசை.

க-ரை: திருவடிகளைத் தரிசிப்பித்துத் தன்னை ஆண்டமையாற் செருக்குற்றுக் கூறல்.

**ஆண்டா னடியா ழரியிசை யாரலி யாந்தில்லையென்**
**ஆண்டா னடியா ரெனச்சன காதிய ரைநயந்தே**
**ஆண்டா னடியா னிலனளந் தானே டடியன்றிரட்(டு)**
**ஆண்டா னடியா ளியைக்காய்ந் தரங்கினின் றாடியதே. 7**

இ-ள்: தான்-தாம், ஆண்-ஆணாகியும், அரி-சிங்கத்தையொத்த, நடு-இடையையும், யாழ் இசை யார்-யாழ் ஓசையையொத்த சொல்லையுமுடைய பெண்களாயும், அலி ஆம்-அலியாகியும் நிற்கின்ற, தில்லை என் ஆண்டான்-திருத்தில்லை என்கின்ற அவ்விடத்தையுடையவரும், அடியார் என-தொண்டராக, சனகாதியரை நயந்தே ஆண்டான்- சனகர்முதலிய நால்வரையும் விரும்பியாண்டவருமாகிய ஸ்ரீ நடேசப்பெருமானுடைய, அடியால்-பாதத்தினாலே, நிலன் அளந்தான்-பூமியை அளந்தவராகிய விஷ்ணுமூர்த்தி, நேடு-தேடிய, அடி-திருவடியானது, அன்று-அக்காலத்தில், ஈரெட்டு ஆண்டான்-பதினாறு வயதினையுடைய மார்க்கண்டேயமுனிவரை, அடு- கொல்ல வந்த, யாளியை-சிங்கத்ததை ஒத்த யமனை, காய்ந்து-கோபித்துதைத்து, அரங்கில்

நின்று-பொற்சபயையில் நின்று, ஆடியது-திருநடனம் புரிந்தது என்றவாறு.

அவனவளதுவென வரூஉம் சப்தப்ரபஞ்சமாயும் நிற்கின்றா னென்பார் "ஆண்டானடியாழரி யிசையாரலியாம்" என்றார், "இசையார்" என உயர்வு பற்றிக் கூறினாரேனும் பொண்பாலாயும் என்பது கருத்தாகக் கொள்க. இது தடத்த லட்சணம். ஐ இரண்டுந் தொகுத்தல். நடியாழ் அடியாளி "முற்றுமற்றொரோ வழி" என்பதனால் இவ்வாறாயின. ஏகாரம் ஈற்றசை.

க-ரை: அருட் குருவாகிய ஸ்ரீநடேசப்பெருமானுடைய வீரப்பிரபாவத்தைத் தெரிவித்தல்.

**ஆடிய நாடகன் சேதினிற் சாடி யலைகங்கையில்**
**ஆடிய நாடகங் கானகந் தேய்தந் தலைந்தெய்த்திர் நீர்**
**ஆடிய நாடகத் தேர்த லரிதென் றரிக்கரியான்**
**ஆடிய நாடகத் தாணினைந் தேர்தில்லை யார்தனன்றே.**
8

இ-ள்: ஆடி-ஆடிமாதத்தில், அம் நாடு அகல் சேதினில். தீர்த்தங்களுள் (தலைமையாக) எண்ணப்படுகின்ற அகன்ற சேதுவிலும், சாடி-மாசி மாதத்தில், அலை-திரை வீசுகின்ற, கங்கையில்-கங்காநதியிலும், ஆடிய-ஸ்நானம் பண்ணும்பொருட்டு, நாடு-தேசங்களிலே, அகம் கால்-உள்ளங்காலும், நகம்-கால் நகமும், தேய்தந்து-தேய, அலைந்து எய்த்திர்-திரிந்து இளைப்புற்றவர்களே, நீர்-நீங்கள் (அதனை இனிவிட்டு), அ நாள்-இறக்குமத்தினத்தை, தக-தெளிவு பெற, தேர்தல்-அறிதல், அரிது -கூடாது, (ஆகையால்) ஆடி என்று-ஆண்டுகொள்ளுதி என்று, அரிக்கு அரியான்-விஷ்ணுமூர்த்திக்கு அரியவராகிய ஸ்ரீநடேசப்பெருமானுடைய, ஆடிய நாடகத்தாள்-

நடிக்கின்ற குஞ்சிதபாதத்தை, நினைந்து-தியானித்துக் கொண்டு, ஏர் தில்லை-அழகிய திருத்தில்லையின் கண்ணே, ஆர்தல்-வசித்தல், நன்று-நல்லது எ-று.

சேதுவினுகரம் தொகுத்தல்: அந்நாள், பண்டறி சுட்டு. ஏ-ஈற்றசை.

க-ரை: கங்கை சேதுவென அங்கமழியாது தில்லையில் வசித்தால் நல்லது பொருந்துமெனல், ஈண்டு வசித்தல், ஸ்ரீ நடேச தரிசனத்தின் பொருட்டுத் தங்குதலைக் குறிக்கின்றது.

**ஆரணங் கத்தனென் றாராய்ந்**
**தறையிறை யானந்தியென்**
**ஆரணங் கத்த னணிதில்லை**
**நாயக னாய்தண்ணறை**
**ஆரணங் கத்தன் றலரி**
**தழித்தா ரனரியயன்**
**ஆரணங் கத்த னடியேன்**
**சனிச்சன னாந்தகனே. 9**

இ-ள்: ஆரணம்-இருக்காதி நான்கு வேதங்களும், கத்தன் என்று-உலககாரணரென்று, ஆராய்ந்து-முற்றுமாராய்ந்து தெளிந்து, அறை - துதிக்கின்ற, இறை-முழுமுதற் கடவுளும், ஆனந்தி என்-ஆனந்த ரூபத்தையுடையவளென்கின்ற, ஆரணங்கு-ஸ்ரீ உமாதேவிக்கு, அத்தன்-பங்கரும், அணி-அழகுபெற்ற,தில்லை நாயகன்-திருத்தில்லை நகரத்திற்கதிபதியும், ஆய்-ஆய்ந்த, தண்-குளிர்ச்சியாகிய, நறை-தேனையுடைய, ஆர்-ஆத்திப்பூ வினாலும், அன்று அலர்-அன்றலர்ந்த, அத்து-செம்மையாகிய, அணங்கு-தெய்வத்தன்மையையுடைய, இதழி-கொன்றைப்பூவினாலுந் தொடுக்கப்பட்ட, தாரன்-மாலையையுடையவரும், அரிஅயனார்-பிரம விஷ்ணுக்கள், அண்-

பொருந்திய, அங்கத்தன்-திருமேனியை யுடையவருமாகிய ஸ்ரீநடேசப்பெருமான், அடியேன்-அடியேனது, சனி-சனியையொத்த, சனனாந்தகன்-பிறவிக்கு நாசகர் என்றவாறு.

ஆரணங்கு என்பது அருமையாகிய அணங்கு என விரித்துரைக்க. சனிச்சனனம் என்பதைப் பண்புத் தொகையாகக் கொள்ளினும் அமையும், அப்போது சனிபண்பியாகுபெயர், ஏ-ஈற்றசை.

க-ரை: தனது பிறவிக்கு நாசகர் ஸ்ரீநடேசப் பெருமானே எனல்.

**சனனந் தரங்க நிரைசெய் கடல்கடத் தற்கலரா**
**சனனந் தரங்க னிறைஞ்செழி லார்ந்த தனித்தில்லையீ**
**சனனந் தரங்கஞ் சநாயக ரர்ச்சித்த சந்தனஞ்ச**
**சனனந் தரங்கன் றனநந் தரங்கன் சரண்கலனே.** 10

இ-ள்: தரங்கம் நிரைசெய்-இன்பத் துன்பங்களாகிய அலை வரிசைகளை உண்டாக்குகின்ற, சனனக்கடல்-பிறவியாகிய சமுத்திரத்தை, கடத்தற்கு-தாண்டுதற்கு, அலராசனன்-கமலாசனனாகிய பிரமனும், நந்து அரங்கன்-பாஞ்சசன்னியமென்னும் சங்கைத் தரித்த திருவரங்கராகிய விஷ்ணுவும், இறைஞ்சு-வணங்குகின்ற, எழில் ஆர்ந்த-அழகு நிறைந்த, தனி-ஒப்பின்மையாகிய, தில்லை ஈசன்-திருத்தில்லை நகரத்திலெழுந்தருளிய இறைவரும், அனந்தர்-பதஞ்சலி முனிவரும், அம்கஞ்ச நாயகர்-அழகாகிய தாமரைக்கு நாயகராகிய சூரியபகவானும், அர்ச்சித்த-பூசித்த, சந்தன்-அழகரும், நஞ்சு அசனன்- விஷபோசனரும், அந்தரங்கன்-வெளிப்படாத நுண்ணியரும், தனம் நந்து-பொன்னிறைந்த, அரங்கன் சபையையுடையவருமாகிய ஸ்ரீநடேசப்பெருமானது, சரண்-திருவடியே,

கலன்-(அடியேனுக்கு) முடியிலணியுமணியாம் எ-று.

ஏகாரம்-ஈற்றசை.

க-ரை: தாண்டவத் திருவடியே தன் முடிக்கு அணியெனல்.

**கலனஞ் சரணந் தனையளித் தாண்டனர் காயத்தரி**
**கலனஞ் சரணந் தயங்கயி லேந்திய கந்தனைகங்**
**கலனஞ் சரணந் தழீஇய தில்லையர் கந்தரத்த**
**கலனஞ் சரணந் தணர்கணின் றேத்திச் சகத்தரசே. 11**

இ-ள்: காயத்தர் இகலன்-தேவர்கட்குப் பகைவனாகிய சூரபதுமன், அஞ்ச-அஞ்சும்படி, ரணம்-போர்த்தொழில், தயங்கு-விளங்குகின்ற, அயில்-வேற்படை, ஏந்திய-தரித்த, கந்தன்-ஸ்ரீ முருகக்கடவுளுக்கு, ஐ-பிதாவும், கம்-பிரமகபாலமாகிய, கலன்-உண்கலத்தையுடைய, அஞ்சு அரணம் - ஐவகை மதில்கள், தழீஇய-சூழ்ந்த, தில்லையர்-திருத்தில்லை நகரத்தையுடையவரும், கந்தரத்து அகல் அல் நஞ்சர்-கழுத்தில் விரிந்த இருளையொத்த கரிய விஷத்தையுடையவரும், அண்- (அந்தர்வேதியிலே இருந்து) அடைந்த, அந்தணர்கள்-வேதியர் மூவாயிரவர்கள், நின்று-இடையறாது நின்று, ஏத்து-துதிக்கின்ற, இ சகத்து அரசு-இந்தச் சகமுதல்வருமாகிய ஸ்ரீநடேசப்பெருமான், அம்-அழகாகிய, சரணந்தனை-திருவடிகளை, கலன் அளித்து- (பிறவிக்கடலைத் தாண்ட) மரக்கலமாகக் கொடுத்து, ஆண்டனர்-அடிமைகொண்டனர் என்றவாறு.

ஏகாரம்-ஈற்றசை.

க-ரை: பிறவிக்கடலைத் தாண்டத் திருவடிப் புணையைக் கொடுத்தாரெனல்.

**அஞ்சத் தியங்கத்தன் சங்கத்த னாதித்த னற்கதிர்கை**
**அஞ்சத் தியங்கத்த னேத்தெயிற் றில்லை யணிநகரான்**
**அஞ்சத் தியங்கத்த னென்னெஞ்சக் கஞ்சத்தி லந்தகநீ**
**அஞ்சத் தியங்கத்த னற்றா ணிறீஇய தாய்ந்திரியே. 12**

இ-ள்: அந்தக-இயமனே, நீ-நீ, அஞ்ச-அஞ்சும்படியும், தியங்க-வருந்தும்படியும், அஞ்சத்து-அன்ன வாகனத்தில், இயங்கு-இவர்ந்து செல்லுகின்ற, அத்தன்-சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமனும், சங்கத்தன்-சங்கினையுடையராகிய விஷ்ணுவும், ஆதித்தன்-சூரியனும், அல் கதிர்-இரவொளியாகிய சந்திரனும், அஞ்சுகை-ஐந்து திருக்கரங்களுடைய, அத்தி - யானை வதனத்தராகிய ஸ்ரீ விநாயகரும், அம் கத்தன்- ஜலபதியாகிய வருணனும், ஏத்து-துதிக்கின்ற, எயில்-மதிலையுடைய, அணி தில்லைநகரான்-அழகாகிய திருத்தில்லை நகரத்தையுடையவரும், அம்சத்தி அங்கத்தன்-அழகிய பராசத்தியைத் தமது திருமேனியில் உடையவருமாகிய ஸ்ரீ நடேசப்பெருமான், தன்-தம்முடைய, நல்தாள்-நன்மையாகிய திருவடியை, என்-அடியேனது, நெஞ்சம் கஞ்சத்தில்-உள்ளக்கமலத்தில், நிறீஇயது- நிற்கச் செய்ததை, ஆய்ந்து இரியே-தெரிந்து ஓடுவாயாக என்றவாறு.

க-ரை: திருவடி உள்ளத்துற்றதென்னுந் துணிவால், யமனை ஓடுதியென அச்சுறுத்தல்.

**இலங்கையி லாய நயனி**
**நினைநினைந் தெய்த்தனள்கண்**
**இலங்கையி லாய நலசந்த்ர**
**சேகர னேயெயிலார்**
**இலங்கையி லாய நலியநின்**
**றாள்கே ளிறைஞ்சரநல்**
**இலங்கையி லாய நகந்தில்லை**
**யாய்நீ யிரங்கினென்னே. 13**

இ-ள்: கண்ணில்-கண்ணிலும், அகம்கையில்-உள்ளங்கையிலுமுள்ள, ஆய்-சங்காரத்திற்கேதுவாகிய, அநல-அக்கினியையுடையவரே, சந்த்ரசேகரனே-சந்திரனைத்தரித்த சிரசையுடையவரே, எயில் ஆர்-மதில் சூழ்ந்த, இலங்கையில்-இலங்காபுரியிலே, ஆயம்நலிய- இராக்கதப்பெண்கள் வருத்த, நின்றாள்-சிறையிருந்தவளாகிய சீதாதேவிக்கு, கேள்-கேள்வனாகிய இராமமூர்த்தி, இறைஞ்சு அர-வணங்கிய சங்காரகர்த்தரே, நல் இல்லம்-நன்மையாகிய வீடு, கைலாய நகம்-கைலாசமலையாகவும், தில்லையாய்-திருத்தில்லை நகரமாகவுமுடைய ஸ்ரீநடேசப்பெருமானே, இலங்கு-விளங்குகின்ற, அயில் ஆய-வேற்படையை ஒத்த, நயனி-கண்ணையுடைய தலைவி, (நீர்வராமையால்) நினை-உம்மை, நினைந்து-எண்ணி, எய்த்தனள்-இளைத்தனள், நீ-தேவரீர், இரங்கின்-இரக்கமுற்றுவந்தால், என்னே-உமக்கு யாது குறைவரும் என்றவாறு.

க-ரை: தரிசனம் பெறாமையால் வருந்தும் உயிர்த் தலைவிக்கு அருளல் வேண்டுமென அருட்டாய் கூறல்.

**என்னந் தரங்கத் தரனாஞ்**
**சனனத் திளைத்திரிறை**
**என்னந் தரங்கத்த ரந்தணர்**
**நின்றேத் தெயிற்றில்லையில்**
**என்னந் தரங்கத் தரந்தகற்**
**செற்றா ரெரிநிறத்தர்**
**என்னந் தரங்கத் தரஞ்சர**
**ணீர்சிந்தி யாத்திறனே.** 14

இ-ள்: அம் தரங்கத்தரம் ஆம்-நீரையுடைய சாகரசமானமாகிய, சனனத்து-பிறவியில், இளைத்திர்-இளைப்படைந்தவர்களே, இறைஎன்- (வேதங்களேகதேசத்தில்)

கடவுளென்கின்ற, நந்தர்-சங்கினை யேந்தினராகிய விஷ்ணு மூர்த்தியுடைய, அங்கத்தர்-என்புகளைத் தரித்தவரும், அந்தணர்-வேதியர் மூவாயிரவரும், நின்று ஏத்து-நின்று துதிக்கின்ற, எயில்-சூழ்ந்த மதிலையுடைய, தில்லையில்-திருத்தில்லை நகரத்திலுள்ள, எல்நந்து-சூரியப்பிரகாசங்கெடத்தக்க, அரங்கத்தர்-பொற் சபையையுடையரும், அந்தகன் செற்றார்- இயமனை உதைத்தவரும், எரிநிறத்தர்-தீவண்ணரும், என்-அடியேனது, அந்தரங்கத்தர்-அந்தரங்கத்திலே இருப்பவருமாகிய ஸ்ரீ நடேசப்பெருமானது, அம்சரண்-அழகாகிய திருவடிகளை, நீர்-நீங்கள், சிந்தியாத்திறன்-நினையாமலிருக்கின்ற காரணம், என்-யாது என்றவாறு.

ஏகாரம்-ஈற்றசை,

க-ரை: பிறவியில் வருந்தியும் அதனை யொழித்தற் கேதுவாகிய திருவடிகளைச் சிந்தியாமலிருப்பதென்னை எனப் பிறர்க்கிரங்கல்.

**சிந்தியா னந்தனி லிந்தார் சடிலற்கந் தில்லையிற்க**
**சிந்தியா னந்த நிறைகடி நான்கினத் தேனவர்கள்**
**சிந்தியா னந்த நிலைக்கிலக் காயினன் றீதிலெனைச்**
**சிந்தியா னந்த நிரயத் தெரிசிகைத் தீக்கிலக்கே. 15**

இ-ள்: யான்-தீவினையேன், அம் தில்லையில்-அழகாகிய திருத்தில்லை நகரத்திலே, அந்தம்-அழகு, நிறை-நிறை, கடி-வாசனையாகிய, நான்கு இனம் தேன் அலர்கள்-நான்கு வகையாகிய தேனையுடைய புட்பங்களை, சிந்து - நதியிலே, யானந்தனில் - (நிலைபெற்ற) தோணியைப்போல, இந்து ஆர்சடிலற்கு-வளைந்த பிறை தங்கிய சடையையுடையராகிய ஸ்ரீநடேசப்பெருமானுக்கு, கசிந்து சிந்தி-மனமுருகித் தூவி, ஆனந்த நிலைக்கு-முத்திக்கு, இலக்கு ஆயினேன்-பாத்திரனாயினேன், (ஆதலாலவர்) தீதில்-யான்

புரிந்த தீவினையால், அந்த நிரயத்து எரி-அந்த நரகத்திலெரிகின்ற, சிகை தீக்கு இலக்கு-கொழுந்தையுடைய அக்கினிக்கு இலக்காக, எனை-அடியேனை, (ஆக்கும்படி) சிந்தியான்-நினைக்கமாட்டார் எ-று.

க-ரை: பக்தியிற் கிரியை புரிவோற்கு முத்தியொரு தலையாற் சித்திக்கு மெனல்.

**இலக்கணஞ் சாரத் திலக்கியத்**
**தேர்ச்சியற் கீதில்லையாய்**
**இலக்கணஞ் சார லரினன்றெய்**
**தானை யெரித்தநெற்றி**
**இலக்கணஞ் சாரற் களத்தர**
**சண்டனென் னிற்செலற்கண்**
**இலக்கணஞ் சாரற் கெணனின**
**தாரளிக் கேயிசையே.** 16

இ-ள்: சாரத்து இலக்கியம் தேர்ச்சியற்கு-பொருட்சாரமுடைய இலக்கியங்களிலே தெளிவையுடையராகிய நற்கீரருக்கு, இலக்கணம் ஈதில்லையாய்-இலக்கணத்தைப் போதிப்பித்த திருத்தில்லை நகரத்தையுடைய ஸ்ரீநடேசப்பெருமானே, இலக்கு-இலக்காக, அண்-பொருந்திய, அஞ்சு ஆர் அலரின்-ஐந்தாகிய கூர்மையையுடைய புட்ப பாணங்களினால், அன்று-அக்காலத்தில், எய்தானை-எய்த மன்மதனை, எரித்த நெற்றியில் - எரித்த நெற்றியில், அக்கு-கண்ணையும், அள்-நெருங்கிய, நஞ்சு-விடம், ஆர்-பொருந்திய, அல்-இருளையொத்த, களத்து-கண்டத்தையுமுடைய, அர-அரனே, சண்டன்-இயமன், என்னில்-அடியேனிடத்தில், செல்லற்கு-வருதற்கு, அண்ணில்-கிட்டினால், அக்கணம்-அந்தக் கணத்தில், சாரற்கு-வருதற்கு, எணல்-திருவுளஞ்செய்தல், நினது-உம்முடைய, அருமை அளிக்கு ஏ-அருமையாகிய கிருபைக்கே, இசை-கீர்த்தியைத்

தருவதாகும் எ-று.

க-ரை: தனக்கு இயமவாதனை யில்லாது ஒழித்தல், ஸ்ரீநடேசப்பெருமானுக்கு நற்கீர்த்தியை நாட்டுமெனல்.

**இசையா ரணங்கரி யாங்கஞ்ச**
**னாதி யிறக்கின்றனர்**
**இசையா ரணங்கரி யானன**
**னத்த ரிடையிற்சச்சார்**
**இசையா ரணங்கரி யார்தில்லை**
**யார்நெல்லை யீசர்திகழ்**
**இசையா ரணங்கரி யார்சடை**
**யாரே யிறையெனற்கே.** **17**

இ-ள்: அண்-பொருந்திய, அம்-அழகினையுடைய, கரி ஆனனன்-யானைமுகவராகிய ஸ்ரீவிநாயகருக்கு, அத்தர்-பிதாவும், இடையில் ச சார்-நடுவிலே சகர வொற்றுச்சார்ந்த, இசையார்-இசை (இச்சை) பொருந்திய, அணங்கு-தேவியாக, அரியார்-விஷ்ணுவையுடையவரும், தில்லையார் - திருத்தில்லை நகரையுடையவரும், நெல்லை ஈசர்,-நெல்லையப்பரும்,திகழ்-விளங்குகின்ற, இசையார்-கீர்த்தியையுடையவரும், அணங்கு-துன்பத்தைச் செய்கின்ற, அரி-சர்ப்பம், ஆர்-பொருந்திய, சடையார்-சடையையுடையவருமாகிய ஸ்ரீநடேசப்பெருமானே, இறை எனற்கு-யாம்முழுமுதற் கடவுள் என்று துணிந்து சொல்வதற்கு, இசை-மூவகை இசையையுடைய, ஆரணம்-நான்கு வேதங்களும், கரி ஆம்-சாட்சியமாகும், கஞ்சன் ஆதி இறக்கின்றனர்- பிரமன் முதலியோரிறக்கின்றவராகின்றனர், (ஆதலால்) இசையார்-(அங்ஙனம்) பொருந்தார் என்றவாறு.

ஏ-இரண்டும் அசைகள்.

க-ரை: பிறப்பிலராகிய ஸ்ரீ நடேசப்பெருமான் ஒருவருக்கே, முழுமுதன்மை உண்டெனபதும், அவையுளராகிய பிரமன் முதலியோருக்கு அஃதின்றென்பதும், இவை முதனூலாற்றெரியுமென்பதும் பெற்றாம். வேதமும் ஒடுங்கித் தோன்றுவதாயினும், கேவல சகலத்தாற்றடுமாறும் பிரமன் முதலியோர் போலாது தனது அநுபூர்வியினால் இறைமை குறித்துணர நிற்கும் என்பார் "ஆரணம் கரியாம்" என்றார். இதனால் கருத்துரு சாபேக்ஷமின்றாம். சொல்லுமெனின் சொன்னவர் இறைவராதலால் அக்குற்றம் வருமெனக் கொள்க.

**என்றன னாட்டந் தணன்சண்டன்**
**கையினி லாதெனையாள்**
**என்றன னாட்டந் தரக்கரி**
**காணச்செ யீசநிலா**
**என்றன னாட்டந் தயங்கர**
**நீடஞ் செயிற்றில்லையாய்**
**என்றன னாட்டந் தனையறிந்**
**தாளற்கிங் கெண்செயலே.** 18

இ-ள்: தரக்கு அரி காண-வியாக்கிரபாத முனிவரும் பதஞ்சலி முனிவரும் தரிசிக்க, ஆட்டம் செய் ஈச-திருநடனம் புரிகின்ற ஸ்ரீ நடராஜப்பெருமானே, நிலா என்று அனல் நாட்டம் தயங்கு அர-சோமசூரியாக்கினிகள் விலோசனமாக விளங்குகின்ற அரனே, நீடு அஞ்சு எயில் தில்லையாய்-நீண்ட ஐந்தாகிய மதில்களையுடைய திருத்தில்லை நகரத்தையுடையவரே, அனம்-அன்னத்தை, நாட்டு-கொடியாக நாட்டிய, அந்தணன்-பிரமனதும், சண்டன்-இயமனதும், கையில் (சிருட்டி சங்கார) கரங்களில், நிலாது-(அகப்பட்டு) நில்லாமல், எனை-அடியேனை, ஆள் என்றனன்-ஆண்டு

கொள்ளுதியென்று பிரார்த்தித்தேன், என்தன்-என்னுடைய, நல்நாட்டம்தனை-நன்மையாகிய விருப்பத்தை, அறிந்து-திருவுளத்தமைத்து, ஆளற்கு-என்னை ஆண்டுகொள்வதற்கு, எண்செயல் என்று-நினைத்தல் எப்போது, (அமையும்) என்றவாறு.

இதுவிற்பூட்டு. ஏகாரம் - ஈற்றசை

க-ரை: பிறப்பிறப் பொருவிய பெரும்பேறுதவுதல் என்று? எனல்.

**எண்கண னாரண னாகேந்**
**திரனா தியரிறைஞ்சி**
**எண்கண னாரண னார்சரண்**
**கஞ்சத் திலங்கியசீர்**
**எண்கண னாரண னார்சிரந்**
**தேடநீ டேர்தில்லையான்**
**எண்கண னாரண னாரத்த**
**னென்ற னிதயத்தனே.** **19**

இ-ள்: எண்கு அணல்-கரடிப்படைக்குத் தலைவனாகிய சாம்பவனும், நார் அண்நல் நாகேந்திரன் ஆதியர்-அன்பு பொருந்திய நல்ல குரக்குவேந்தனாகிய சுக்ரீபன் முதலியோரும், இறைஞ்சி-வணங்கி, எண்-தியானித்த, கணன் நாரணனார்-கண்ணன் நாரணன் என்கின்ற பெயர்களையுடைய விஷ்ணுமூர்த்தி, சரண்-திருவடிகளையும், கஞ்சத்து இலங்கிய-தாமரைமலரில் விளங்குகின்ற, சீர் எண் கணன் ஆரணனார்-சிறப்பினையுடைய எண் கண்ணனாகிய பிரமதேவன், சிரம்-திருமுடியையும், தேட-(வராக அன்னங்களாகிப்) பூமியை அகழ்ந்தும், வானிற்பறந்தும் தேட, நீடு-அவர் கட்கண்மையாகாது

கீழுமேலுநீண்ட, ஏர்-அழகாகிய, தில்லையான்-திருத்தில்லை நகரத்தையுடையவரும், எண் கணம் ஆர்-எண்ணப்பட்ட பூதகணங்கள் சூழ்ந்த, அணன்-பிதாப்போன்றவரும், ஆரத்தன்- ஆத்திப் பூமாலையுடையவருமாகிய ஸ்ரீநடேசப்பெருமான், என்தன் இதயத்தன்- அடியேனது உள்ளத்தின் உள்ளுறையாக இருக்கின்றான் என்றவாறு.

ஏ-ஈற்றசை.

க-ரை: ஸ்ரீநடேசப்பெருமான் என் உள்ளத்தினுள்ளுறை என்பது.

**இலாயங் கனையாழி யிந்தினன்**
**றேர்நில னெண்கணனா**
**இலாயங் கனையா ரணங்கிள்ளை**
**கல்சிலை யேய்ந்ததண்கார்**
**இலாயங் கனையார் கணையாயீன்**
**றாரிறை யேற்றநிகர்**
**இலாயங் கனையா தெனையா**
**ளெழிற்றில்லை யிற்சந்தனே. 20**

இ-ள்: ஆய் அங்கனை இல்-உலக மாதாவாகிய ஸ்ரீஉமாதேவி மனைவியாகவும், இந்து இனன் ஆழி-சந்திர சூரியர் உருளையாகவும், நிலன் தேர்-பூமி தேராகவும், எண் கணன் நா இலாயம்-பிரமனுடைய வாய் குதிரை நிற்குமிடமாகவும், கனை ஆரணம் கிள்ளை-கோஷிக்கின்ற வேதங்கள் குதிரைகளாகவும், கல் சிலை-மேருமலை வில்லாகவும், ஏய்ந்த தண் காரில் ஆய் அங்கன்-பொருந்திய தன்மையாகிய முகில்போல ஆராய்ந்து உரைக்கும் வடிவத்தை உடைய விஷ்ணுமூர்த்தி, ஐ ஆர் கணையாய்-அழகு நிறைந்த அஸ்திரமாகவும் உடையவரே, ஈன்றார்-பெற்றோரும், இறை-

மேலோர் கடவுளும், ஏற்ற-தக்க, நிகர்-ஒப்பும், இலாய்-இல்லாதவரே, எழில் தில்லையில் சந்தனே-அழகாகிய திருத்தில்லை நகரத்திலே எழுந்தருளிய அழகராகிய ஸ்ரீநடராஜப் பெருமானே, அங்கன்-அவ்விடத்தே,நையாது-யான் வருத்தமுறாமல், எனை ஆள்-அடியேனை ஆண்டுகொள்ளுதி என்றவாறு.

க-ரை: நரகத்திலும் பிறவியிலும் வருந்தாமல் எனையாளெனல்.

**சந்தனஞ் சாதியா னத்த**
**னெழிற்றில்லைத் தானத்தன**
**சந்தனஞ் சாதியா நன்னடை**
**யாளிடைச் சாற்றியசெல்**
**சந்தனஞ் சாதியாழ்த் திண்டிற**
**லாயென்ற சங்கரனைச்**
**சந்தனஞ் சாதியாய் தண்ணல**
**ரிட்டடி சாரகனே.** **21**

இ-ள்: அகனே-மனமே! (நீ பயன்பெற வேண்டுமெனில்) சந்தன்-அழகரும், அஞ்சு ஆதி-பஞ்சசாதாக்கிய முதல்வரும், ஆன் அத்தன்-இடபத்தையுடைய கடவுளும், எழில் தில்லை தானத்தன்-அழகாகிய திருத்தில்லை நகரத்தையுடையவரும், அனம் சாதியா நல்நடையாளிடை-அன்னம்பழக முடியாத நல்ல நடையையுடையராகிய பரவை நாச்சியாரிடத்து, சாற்றிய-சந்தேசஞ் சொல்ல, அசந்து செல்-பன்முறை வருந்திச்சென்ற, சந்தன்-தூதரும், யாழ்திண் திறலாய் - மிக்க வல்லவனாகிய பாணபத்திரனே, அஞ்சாதி என்ற- (ஏமநாதனுக்குப்) பயப்படாதே என்றருளிய, சங்கரனை-சங்கரனென்னுந் திருநாமத்தை உடையவருமாகிய ஸ்ரீ நடேசப்பெருமானுக்கு, சந்தனம்சாதி ஆய்

தண் அலர்-சந்தனத்தையும் வகையாகிய தெரிந்த தன்மையையுடைய பூக்களையும், இட்டு-கொடுத்து, அடி-(அவருடைய) திருவடிகளை, சார்-சேர்ந்துகொள்ளுதி என்றவாறு.

க-ரை: ஸ்ரீநடேசப்பெருமானை அருச்சித்து அவருடைய திருவடிகளைச் சார்ந்து கொள்ளுதி யென மனத்தை ஏவுதல்.

**அகங்கார நந்தநின் னர்ச்சனைக்**
**காழி யடைதியென்றாய்**
**அகங்கார நந்த நினைந்தாள்**
**சினையென் றனநணச்செய்**
**அகங்கார நந்தநி தந்ததைந்**
**தீன்செய யற்றண்டலை**
**அகங்கார நந்தநி றைதில்லை**
**சாரந் தணர்க்கிறையே.** 22

இ-ள்: அகம்கார்-தேகங்கரிய, அனந்த-விஷ்ணுவே, நின் அர்ச்சனைக்கு-உனது பூசைக்குப் பயனாக, ஆழி-சக்கரத்தை, அடைதி-பெற்றுக் கொள்ளுதி, என்றாய்-என்று திருவாய்மலர்ந்தவரே, சினை என்று-தம் முட்டைகளென்று, அனம்-அன்னனங்கள், நண-சேர்ந்து அடைகாக்க, செய- சிவந்த, கங்கு-வரம்புகளிலே, ஆரம்-முத்துக்களை, அநிதம் நந்து-அநேக சங்குகள், ததைந்து-நெருங்கி, ஈன்-ஈனுகின்ற, செய்-வயல்களுக்கு, அயல்-பக்கத்திலுள்ள, தண்டலை அகம்-சோலையிலே, கார் அநந்தம் நிறை-அளவற்ற மேகங்கள் நிறைகின்ற, தில்லைசார் அந்தணர்க்கு இறையே-திருத்தில்லை நகரத்திலெழுந்தருளிய வேதியர் மூவாயிரவர்க்குத் தலைவராகிய ஸ்ரீ நடேசப்பெருமானே, அகங்காரம் நந்த நினைந்து ஆள்-சிறியேனது அகங்காரம் கெடத் திருவுளத்தே நினைந்து ஆண்டருளுதி என்றவாறு.

க-ரை: தன்னகந்தை நீங்கத் தன்னையாளும்படி பிரார்த்தித்தல்.

**சாரங்கத் தானனத் தான்காட்சி**
**நேர்தந் தழைக்கினங்கென்**
**சாரங்கத் தானனத் தானிறை**
**நீர்த்தில்லைச் சந்தநண்ணா**
**சாரங்கத் தானனத் தாளியை**
**நீக்கர தந்தியந்தி**
**சாரங்கத் தானனத் தானத்த**
**தாநின் றரிசனையே.** 23

இ-ள்: சாரங்கத்தான்-சாரங்கமென்னும் வில்லையுடைய விஷ்ணுமூர்த்தியும், அனத்தான்-அன்ன வாகனத்தையுடைய பிரமதேவனும், காட்சி நேர்தந்து அழைக்கின்-நேரே தரிசனங் கொடுத்தழைத்தால், (அவ்வழைப்பிலும்) அங்கு-அவ்விருவர்களுடைய பதவிகளிலும், என்சாரம்-என்னசாரமுண்டு, கத்தா-கர்த்தனே, நல்நத்தால் நிறை நீர் தில்லை சந்த - நல்ல சங்கினால் நிறைந்த நீர்வளத்தையுடைய திருத்தில்லை நகரத்தில் எழுந்தருளிய அழகரே, நண் ஆசாரம்-பொருந்திய ஆசாரவாயிலிலே, கத்து-கத்திய, ஆன்-பசுவினது, அல் நந்து ஆளியை-பாபமிகுதற்கேதுவாகிய கேட்டை, நீக்கு அர-நீக்கிய சங்கார கர்த்தாவே, அந்தி சார் அங்கத்து-செவ்வானம்போலப் பொருந்திய திருமேனியையும், தந்தி (சார்) ஆனனத்தான்-யானையினது முகம்போலச் சார்ந்த முகத்தையுடையராகிய ஸ்ரீவிநாயகருக்கு, அத்த-பிதாவாகிய ஸ்ரீநடேசப்பெருமானே, நின் தரிசனையே தா-(சாரமுள்ள) உமது தரிசனத்தையே தருக என்றவாறு.

க-ரை: பஞ்சகிருத்திய காரணராகிய ஸ்ரீ நடேசப் பெருமானுடைய தரிசனத்தால் பலனுண்டன்றிப் பிரம விஷ்ணுக்கள் தரிசனத்தால் பயனில்லையெனல்.

**தரிசனாங் கண்டா ரிசையரி லார்தில்லைச் சங்கரர்தைத்**
**தரிசனாங் கண்டா ரிசைதச தீர்த்தத்தர் தானந்தலந்**
**தரிசனாங் கண்டார் தகைநட ராசர் தனிநடன**
**தரிசனாங் கண்டார் சனனங்கள் காணார் தரணியிலே.**

**24**

இ-ள்: தரிசு-தரிசு நிலங்களிலே, அனம்-அன்னங்கள், கண்டு ஆர் இசையரில்-கற்கண்டின் மதுரத்தையொத்த மிக அருமையாகிய சொல்லையுடைய மகளிரைப்போல, ஆர்-நிறைந்திருக்கின்ற, தில்லைச் சங்கரர்-திருத்தில்லை நகரத்திலெழுந்தருளிய சுகம்புரி முதல்வரும், தை தரிசம்-தையமாவாசையில், நங்கு அண்டார்-பழிச்சொல் பொருந்தாதவர்களாகிய பெரியோர்கள், இசை-ஆடப்பெறுகின்ற, தசதீர்த்தத்தர்-பத்துத் தீர்த்தத்தை உடையவரும், தானம் தலம் தரிசனம் கண்டார்-ஆகாயத்திலும் பூமியிலும் தங்கிய உயிர்களை சிருஷ்டித்தவர்களுமாகிய, தகை-இயற்கையறிவு முதலிய அறுகுணங்களையுடைய, நடராசர்-ஸ்ரீநடராசப்பெருமானுடைய, தனி நடனம் தரிசனம் கண்டார் - ஒப்பின்மையாகிய திருநடனத்தைத் தரிசித்தவர்கள், தரணியில்-பூமியிலே, சனனங்கள் காணார்-பிறவியெடார் என்றவாறு.

இவ்வாறு புலியூர் வெண்பாவிலும், "குஞ்சிதத்தாட் கண்டவரைக் கும்பிடப்பெற்றோர்கள் விரும், புஞ்சிவவீ டெய்தும் புலியூரே" எனவருதல் காண்க.

தில்லையிலுள்ள தசதீர்த்தங்களாவன: சிவகங்கை, குய்யதீர்த்தம், புலிமடு, வியாக்கிரபாததீர்த்தம், அனந்த தீர்த்தம்,

நாகசேரி, பிரமதீர்த்தம், சிவப்பிரியை, திருப்பாற்கடல், பரமானந்த கூபம் என்பன.

க-ரை: ஸ்ரீ நடராஜ தரிசனையால் பிறவியறு மெனல்.

**தரணியங் காரக னாகாயங் காலயந் தந்தநற்சித்**
**தரணியங் காரக னாடெயிற் றில்லைத் தலநடநா**
**தரணியங் காரக னாயேற்கிங் கேகா தசத்தினிற்கத்**
**தரணியங் காரக னாதியர் தீதெனைச் சாரினென்னே. 25**

இ-ள்: தரணி-பிருதிவியையும், ஆகாயம்-ஆகாயத்தையும், கால்-வாயுவையும், அயம்-அப்புவையும், தந்த-உண்டாக்கிவைத்த, நல்சித்தர்- நன்மையாகிய ஞானரூபர் ஆகிய, அணி அம்- அழகாகிய மேகத்தையொத்த, காரகன்-திருக்காரக மென்னுந் திருப்பதியையுடைய விஷ்ணுமூர்த்தி, நாடு- விரும்புகின்ற, எயில்- மதிலையுடைய, தில்லை நகரத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீநடேசப்பெருமான், அங்கு-அத்தில்லை நகரத்திலே, ஆர்-பதிந்த, அகன்-மனத்தையுடைய, நாயேற்கு-நாயையொத்த எளியேனுக்கு, இங்கு- இவ்வுலகத்தில், அகன் அங்கு ஆர்-சரீரத்தை எடுத்தபோது (சனன காலத்தில்), ஏகாதசத்தில்-பதினோராமிடமாகிய லாபஸ்தானத்தில், அணி நிற்க-சேர்ந்துநிற்க, தரணி-சூரியனும், அங்காரகன் ஆதியர்-செவ்வாய் முதலியோருமாகிய கிரகங்களுடைய, தீது-தீயபலன், எனைசாரின்-என்னைச் சார்ந்தாலும், என்-என்ன செய்யும் என்றவாறு.

காரம் என்பது நூற்றெட்டுத் திருப்பதியில் ஒன்று.

க-ரை: ஸ்ரீநடேசப்பெருமானுடைய திருவருளைத் துணையாகப் பற்றி நின்றேனை, நவக்கிரகங்களின் தீமை என்செய்யுமெனல். நாயையொத்தல், அது தான் கக்கியதை மறுவலும் விரும்பல் போல, வெறுத்துத் தள்ளியதை மீண்டும் மீண்டும் விரும்பல்,

நவக்கிரகங்களுள் தீயன சூரியன், செவ்வாய், சனி, இராகு, கேது, தேய்மதி என்பன. அங்ஙனமாயினும், ஆறெட்டுப்பன்னிரண்டு முதலிய தீய இடங்களை அடைந்த நல்லர் தீயராதலும், திரிகோண கேந்திரங்கள் முதலிய நல்ல இடங்களை அடைந்த தீயர் நல்லராதலும் உண்டு. ஆதலின், எல்லாமடங்க " ஆதியர்" என்றார். இலாபஸ்தானத்து நிற்றல், இலாபஸ்தானத்துப்பயனை உதவும்படி செய்தல், இங்ஙனம் கோசாரம் நோக்கிக் கூறினாரேனும் உபலக்ஷணத்தாற் பிறவுங் கொள்க.

**சாரத் தனந்தனை யாதரி**
**யாளனந் தல்லயராள்**
**சாரத் தனந்தனை யார்கண்**
**டிரங்கத் தழலிற்செயா**
**சாரத் தனந்தனை யாளெழிற்**
**றில்லையிற் சங்கரிசேர்**
**சாரத் தனந்தனை யானிறை**
**யானையெண் டந்திடையே.** **26**

இ-ள்: தழலில்-ஓமாக்கினியில், செய்-செய்த, ஆசாரத்தன்-புனிதத்தையுடையவராகிய, நந்தனை-திருநாளைப்போவாரை, ஆள்-ஆண்ட, எழில்-அழகாகிய, தில்லையில்-திருத்தில்லை நகரத்திலெழுந்தருளிய, சங்கரிசேர்-ஸ்ரீசிவகாமித்தாயார் சேர்ந்த, சார்-பக்கத்தையுடைய, அத்தன்-கடவுளும், அந்தம்-முடிவு காலத்தில், நையான்-அழியாதவரும், இறையானை-முழுமுதல்வருமாகிய ஸ்ரீ நடேசப்பெருமானை, எண்-(காமுற்று) எண்ணிய, தந்து இடை-நூலையொத்த இடையினையுடைய தலைவி, தன்-தன்னுடைய, நந்து-விரும்பிய, அனையர்-தாயர்கள், கண்டு-பார்த்து, சார-சூழ்ந்துவரவும் இரங்க-வருந்தவும், சாரத்து-நல்ல சாரத்தையுடைய, அனம் தனை-அன்னத்தை, ஆதரியாள்-

விரும்பாள், அனந்தல் அயராள்-நித்திரை செய்யாள் என்றவாறு.

நத்து என்பது எதுகை நோக்கி நந்து என மெலிந்து நின்றது. ஏ-ஈற்றசை.

க-ரை: தலைவி வருந்தற்கு நற்றாய் இரங்கல். (இவள் இருந்தபடி என்னை)

**தந்தனஞ் சேந்தகஞ் சங்கை**
**நடையிடைத் தாய்நற்றனி**
**தந்தனஞ் சேந்த னயனாதி**
**யர்தினஞ் சார்தில்லைநாந்**
**தந்தனஞ் சேந்தற் களத்தினன்**
**றன்னிலை சார்ந்தசிட்டர்**
**தந்தனஞ் சேந்தற் கெழிற்கதி**
**யீந்தான் றனிநகரே.** **27**

இ-ன்: தந்து-நூலையும், அனம்-அன்னத்தையும், சேந்த கஞ்சம்-செந்தாமரை மலரையும் (எதிர்முறையே) ஒத்த, கை-கையையும், நடை-நடையையும், இடை-இடையையுமுடைய, தாய்-ஸ்ரீசிவகாமித்தாயாரும், நல்தனிதந்தன்-நல்ல ஏகதந்தராகிய ஸ்ரீவிநாயகக்கடவுளும், அம்சேந்தன்-அழகிய ஸ்ரீசுப்பிரமணியக்கடவுளும், அயன் ஆதியர்-பிரமன் முதலியவர்களும், தினம் சார்-எப்போதும் சார்ந்திருக்கின்ற, தில்லை-திருத்தில்லை நகரமானது, நாம் தந்த-(விஷ்ணு முதலியோருக்கு) அச்சத்தைக் கொடுத்த, நஞ்சு-விஷத்தை, ஏந்து-ஏந்திய, அல்-இருளையொத்த, களத்தினன்-காளகண்டத்தையுடையவரும், தன் நிலை சார்ந்த சிட்டர் தம் தனம்-ஆத்ம சொரூபத்தையடைந்த பெரியோர்களுடைய பொருளாயிருப்பவரும், சேந்தற்கு-சேந்தனென்பவர்க்கு, எழில் கதி ஈந்தான்-அழகாகிய மோக்ஷத்தைக் கொடுத்தவருமாகிய

ஸ்ரீநடேசப்பெருமானுடைய, தனிநகர்-ஒப்பற்ற கோவிலாகும் என்றவாறு.

ஏ-ஈற்றசை.

க-ரை: திருத்தில்லை நகரமே ஸ்ரீ நடேசப் பெருமானுடைய தலமெனல்.

**நகரந் தகரந் தனிலிக**
**ரந்தனை நல்கெழில்செய்ந்**
**நகரந் தகரந் தனிலனைத்**
**திற்செறி நந்திதில்லை**
**நகரந் தகர நறியன**
**கேச நகநங்கைய**
**நகரந் தகரங் கலையச்செற்**
**றாடிய நற்சரணே.** 28

இ-ள்: கரந்து-மறைந்து, அகரந்தனில்-அகரத்தைப்போல, அனைத்தில்-எவற்றினும், செறி-வியாபித்திருக்கின்ற, நந்தி-நந்தியும், தில்லைநகர்-திருத்தில்லை நகரத்தில் எழுந்தருளிய, அம்-மேகத்தையொத்த, தகரம்-மயிர்ச்சாந்து, நறியன-கமழப் பெற்ற, கேசம்-கூந்தலையுடைய, நகநங்கை-மலை மகளாகிய ஸ்ரீ பார்வதியையுடைய, அநகர்-மலரகிதராகிய ஸ்ரீ நடேசப் பெருமானுடைய, அங்கு அந்தகர் அலைய செற்று-திருக்கடவூரிலே இயமனை அலையும்படி உதைத்து, ஆடிய-நடனம் புரிந்த, நல் சரணே-நல்ல பாதங்கள், நகரம் தகரம் தனில்-நகர தகர வொற்றுக்களிலேறிய, இகரம் தனை-இகரத்தை (நிதியை), நல்கு-அடியேனுக்குக் கொடுக்கின்ற, எழில் செய்ந்ந-அனுக்கிரகமாகிய எழிலைப் புரிவனவாம் என்றவாறு.

க-ரை: தான் வீடடைதற்கேதுவாகிய அறத்தின் பொருட்டுத் தனக்குப் பொருளைத் தருவன ஸ்ரீநடேசப்பெருமானுடைய திருவடிகளே யெனல். செய்ந்ந: குறிப்பு வினைமுற்று. இது செய்ந்நந், செய்ந்நள், செய்ந்நர் என உயர்திணை முப்பாலிலும், செய்ந்ந எனப் பலவின் பாலிலும் வரும். நறியன. முற்றாய்த்திரிந்து நின்ற குறிப்பு வினைப்பெயரெச்சம்.

**நந்தனங் கந்தர நன்னடை யானந்த நங்கையத்தன்**
**நந்தனங் கந்தரஞ் சத்தரை நானா நறையலரார்**
**நந்தனங் கந்தரஞ் சார் தில்லை யின்க ணடனஞ்செயா**
**நந்தனங் கந்தர நச்சா னினிநளி னத்தஞ்சனே. 29**

இ-ள்: நளினத்து அஞ்சனே-தாமரைமலரில் வசிக்கின்ற அன்னவாகனனாகிய பிரமனே, நந்து-சங்கினையொத்த, கந்தரம்-கழுத்தையும், அனம்-அன்ன நடையையொத்த, நல்நடை-நல்லநடையினையுமுடைய, ஆனந்தநங்கை - ஸ்ரீ சிவகாமித்தாயாருக்கு, அத்தன்-பங்கரும், நம் தனம்-நமது செல்வமானவரும், கந்தர்-ஸ்ரீசுப்பிரமணியக்கடவுளுக்கும், அஞ்சு அத்தர்- ஐங்கரராகிய ஸ்ரீவிநாயகக்கடவுளுக்கும், ஐ-பிதாவும், நானா-பலவிதமான, நறை-தேனையுடைய, அலர் ஆர்-புட்பங்களால் நிறைந்த, நந்தனம்-நந்தனவனம், கந்தரம்-மேகத்தை, சார்-தொடுகின்ற, தில்லையின்கண்-திருத்தில்லை நகரத்திலே, நடனம்செய்-திருக்கூத்தாடுகின்ற ஆனந்தன்-ஆனந்த சொரூபருமாகிய ஸ்ரீநடேசப்பெருமான், அங்கம் தர-அடியேனுக்குத் தேகத்தைக் கொடுக்க, இனி நச்சான்-இனி ஒருகாலமும் விரும்பமாட்டார் என்றவாறு.

இங்ஙனமாயின் நீ செய்யக்கிடந்த தென்னை? என்பது குறிப்பெச்சம். ஏ-ஈற்றசை.

**அஞ்சக் கரனா ரயனிந்தி ராதிய ராலங்கண்டே**
**அஞ்சக் கரனா ரநன்றள்ளி யார்ந்தா ரனனண்ணெற்றி**
**அஞ்சக் கரனா ரணிதில்லை யார்கதி யைநல்கியல்**
**அஞ்சக் கரனா ரளித்தா ரடியெற்கா னந்தத்தையே.**
**30**

இ-ள்: அம் சக்கரனார்-அப்புவின் வடிவாகிய விஷ்ணுமூர்த்தியும், அயன்-பிரமனும், இந்திராதியர்-இந்திரன் முதலிய தேவர்களும், ஆலம்கண்டே அஞ்ச-விஷங்கண்டு பயந்தோட, கரம்ஆர அள்ளி நன்று ஆர்ந்தார்-கைநிறைய முகந்து இனிதருந்தினவரும், அனல் நண் அம் நெற்றி சக்கு அரனார்-அக்கினி பொருந்திய அழகிய நெற்றிக்கண்ணையுடைய சங்கார கருத்தாவும், அணிதில்லையார்-(நீர்வளமுதலிய வளங்களைத் தனக்கணியாக) அணிந்த திருத்தில்லை நகரத்தை உடையவரும், கதியைநல்கும் இயல் அஞ்சு அக்கரனார்-கைவல்லியத்தைக் கொடுக்கத்தக்க தன்மையுடைய பஞ்சாக்ஷரப் பொருளுமாகிய ஸ்ரீ நடேசப்பெருமான், அடியற்கு-அடியேனுக்கு, ஆனந்தத்தை அளித்தனர்-நித்தியானந்தத்தைக் கொடுத்தருளினார் என்றவாறு.

ஏ-ஈற்றசை.

க-ரை: தான் பெற்ற சுகத்தைச் சொல்லி மனம் மகிழுதல்.

**திருத்தில்லை நிரோட்டக யமகவந்தாதி**

**மூலமும் உரையும் முற்றிற்று.**

---

உ

## திருத்தில்லைச் சிவகாமசௌந்தரியார் தோத்திரம்

### காப்பு

**சீர்மலி தில்லைச் சிவகாம**
**சௌந்தரி செஞ்சரண்மேல்**
**நார்மலி செந்தமிழ் நன்மொழி**
**மாலை நவின்றணிய**
**ஏர்மலி யும்படி யென்னெஞ்ச**
**மேவி யிருந்தருளுங்**
**கார்மலி மேலைக் கவின்கோ**
**புரத்தமர் கற்பகமே.**

### நூல்

**கலைமக ளேகனிந் தெல்லாக்**
**கலைகளுங் கற்பிக்கவும்**
**அலைமக ளேகனிந் தெல்லாப்**
**பொருளு மளிக்கவுநன்**

---

காப்பு: மேகம் தவழும், அழகுமிகுந்த மேற்குக் கோபுர வாயிலில் எழுந்தருளியுள்ள கற்பக விநாயகர், சிறப்பு மிகுந்த தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாமசுந்தரி அம்மையின் செம்மையான திருவடிகளின் மேல் அன்புமிகுந்து, செந்தமிழில் அமைந்த நல்ல சொற்களால் மாலை செய்து அணிவித்திட, நன்மை மிகும்படி அடியேன் நெஞ்சத்தில் பொருந்தியிருந்து அருள்செய்வார் ( என அவரை வணங்கி மகிழ்கிறேன்)

1. தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாம சுந்தரியே! பெருமைக்குரிய பாண்டியனின் தலைமகளே! நல்ல மலை

**மலைமக ளேகடைக் கண்ணருள்**
**செய்தருண்; மாவழுதித்**
**தலைமக ளேதில்லை வாழ்சிவ**
**காம சௌந்தரியே. 1**

**பொங்கரி யேறெனப் புண்செய்வேற்**
**கூற்றம் பொரவருமேல்**
**அங்கரி யேறிவர்ந் தையனும்**
**நீயும்வந் தாண்டருள்வாய்**
**வெங்கரி யேமுதன் மேவுயிர்க்**
**கின்பம் விழைந்தளிக்கும்**
**சங்கரி யேதில்லை வாழ்சிவ**
**காம சௌந்தரியே. 2**

---

மகளே! கலை மகள் மனம் இரங்கி எல்லாக் கலைகளையும் அடியேனுக்குக் கற்பிக்கவும், அலை கடலில் தோன்றிய திருமகள் மனம் இரங்கி எல்லாச் செல்வங்களையும் அடியேனுக்கு அளித்திடவும், நீ கடைக்கண் பார்த்து அருள் செய்வாயாக!

மலைமகள் கலைமகளையும், திருமகளையும் தம் கண்களாகக் கொண்டு விளங்குகிறாள். காமாட்சி என்ற பெயர் அப்பொருளதே. க=கலைமகள், மா=திருமகள், அட்சி=கண்களாக உடையவள். எனவே அவள் கடைக்கண் அருள்செய்தாலேயே கலைமகளும், திருமகளும் அருள்செய்வர் என்பதாம்.

2. அனைவராலும் விரும்பப்படும் (பெரிய) யானை முதலாக (எறும்பு ஈறாக) உலகில் உள்ள உயிர்களுக்கு இன்பத்தை விரும்பியளிக்கும் சங்கரியே! தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாம சுந்தரியே! கோபம் மிகுந்த ஆண் சிங்கம் என, உயிர்களைக் குத்திப் புண்ணாக்கும் வேலினையுடைய இயமன்,

**அடாதகை யாநெஞ்சு மன்பிலா**
**வாக்குநன் றஞ்சலிக்க**
**எடாதகை யும்மெனக் கேதகு**
**மென்றே யியற்றினை, கார்**
**விடாதகை லைக்கண் விமல**
**ருடனார் விமலியெழில்**
**தடாதகை யேதில்லை வாழ்சிவ**
**காம சௌந்தரியே.** **3**

---

என்னுடன் போர் செய்து, என் உயிரை வவ்வ வருவானே யானால், அவ்விடத்தில், சிங்கத்தின் மீது ஏறி, நீயும், உன் மணாளனாகிய சிவபெருமானும், வந்தருளி, இயமனிடமிருந்து என்னைக் காத்தருள்வாயாக.

வவ்விய பாகத்து இறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும், உங்கள் திருமணக்கோலமும், சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்தென்னை ஆண்ட பொற்பாதமும் ஆகிவந்து
வெவ்விய காலன் என் மேல் வரும்போது வெளிநிற்கவே. 18

என்ற அபிராமி அந்தாதிப் பாடல் இங்கு நினைக்கத்தக்கது. சங்கரி என்ற பெயருக்கு இன்பம் செய்பவள் என்று பொருள்.

3. மேகங்கள் இடையறாது சூழ்ந்துள்ள கைலை மலையினிடத்தில் சிவபெருமானுடன் இணைந்துள்ள பெருமாட்டியே! அழகிய தடாதகைப் பிராட்டியே! தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாமசுந்தரியே! நின்னை நினைக்கும் தகுதியற்ற நெஞ்சத்தையும், நின்னைத் துதிக்கும் அன்பில்லாத வாக்கையும், நின்னை நன்றாகக் குவித்து அஞ்சலிக்காத கைகளையும் எனக்குத் தகுதியானவை என்று படைத்துள்ளாயே! (நின்னை நினைக்குமாறும், துதிக்குமாறும் வணங்குமாறும்

**தீயகி ராதரோ ரைவர்செய்**
**மாயத் திருக்கதனால்**
**ஆயகி லேச மனைத்துந்**
**தவிர்த்தின் பளித்தருளாய்**
**நாயகி யேயென நான்மறை**
**யேத்து நறியபஞ்ச**
**சாயகி யேதில்லை வாழ்சிவ**
**காம சௌந்தரியே. 4**

---

இவற்றின் இயல்பை மாற்றியருள்வாயாக).

கோடாத வேதனுக் கியான்செய்த குற்றமென் குன்றெறிந்த
தாடாள னேதென் தணிகைக் குமரநின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத கண்ணுந் தொழாதகையும்
பாடாத நாவு மெனக்கே தெரிந்து படைத்தனனே. 78

என்ற கந்தரலங்காரப் பாடல் இங்கு நினைக்கத்தக்கது.

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்த சென்னியும் தந்த தலைவனை

என்பது அப்பர் அமுதமொழி.

4. தலைவியே என நான்கு மறைகளும் போற்றுகின்ற மணம் வீசும் ஐந்து மலரம்புகளை உடையவளே! தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாமசுந்தரியே! தீமை செய்யும் கொடியவர்களாகிய ஐம்பொறிகளின் வஞ்சகத்தால் எனக்கு உண்டான துன்பங்கள் அனைத்தும் நீக்கி, இன்பத்தை அளித்தருள்வாயாக!

**நாயே னிழைத்த நவையயோ**
**வளவிலை நண்புலனாற்**
**பேயே யெனத்திரிந் தெய்த்தேன்**
**பிறவிப் பிணிக்கென்செய்வேன்**
**நீயே யருள்புரி யாவிடி**
**னார்துணை நீணிலத்தில்**
**தாயே திருத்தில்லை வாழ்சிவ**
**காம சௌந்தரியே.** 5

**தேம்படு மின்சொற் றெரிவைய**
**ரால்வருஞ் சிற்றின்பினை**
**வேம்பெனக் கண்டு வெறுத்துன்**
**றிருத்தாள் விழைவதென்றோ?**

---

5. பெரிய நிலவுலகில் எவ்வுயிர்க்கும் தாயே! திருத்தில்லையிலே எழுந்தருளியுள்ள சிவகாம சுந்தரியே! நாய்போன்றவனாகிய அடியேன், செய்த குற்றங்களோ அளவில்லாதன. பொருந்திய ஐம்புலன்களால் அலைக்கழிக்கப்பட்டு பேய் போன்றவன் எனச் சொல்லுமாறு திரிந்து இளைத்தேன். இதனால் தொடர்ந்து வரும் பிறவிநோய்க்கு ஆற்றாது என் செய்வேன்? உன் சேயாகிய எனக்குத் தாயாகிய நீயே அருள் செய்யவில்லை என்றால், வேறு யார் இவ்வுலகில் எனக்குத் துணையாக இருக்க முடியும்?

பொடியார் மேனியனே புரிநூல் ஒருபால் பொருந்த
வடியார் மூஇலைவேல் வளர் அங்கையின்மங்கையொடும்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்து எம்
அடிகேள் என் அமுதே எனக்கார் துணை நீஅலதே. 7.28.1

என்ற சுந்தரர் திருப்பதிகம் முழுமையும் நினைக்கத்தக்கது.

6. மூங்கில் போன்ற தோள்களையுடையவளே! கவுரி! (பொன்னிறத்தினளே! கங்காளன் துணைவியே! திருவருளின்

**காம்பன தோளி கவுரிகங்**
**காளி கருணைவைப்பாம்**
**சாம்பவி யேதில்லை வாழ்சிவ**
**காம சௌந்தரியே. 6**

**சடங்கண்ட வன்பதந் தாமரைக்**
**கண்ணன் றரும்பதம்வான்**
**அடங்கண்ட வாணர்க் கரையன்**
**பதமாண் டழிவுறலால்**

---

இருப்பிடமாம் பார்வதியே! தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாம சுந்தரியே! தேன்போன்ற இனிய சொல்லினராகிய பெண்களால் வரும் சிற்றின்பத்தை, வேப்பம்இலையாகக் கண்டு வெறுத்து அடியேன் உன் திருவடிகளை விரும்புவது எந்த நாளோ?

7. பொருந்திய நிலங்களும், குளங்களும் அமைந்த நல்லவளம் அமைந்த தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாம சுந்தரியே! உலகைப் படைத்த பிரமனின் பதம், (பதவி) தாமரைக் கண்ணனாகிய திருமாலின் வைகுந்த பதம், வானத்தில் அடங்கியுள்ள அண்டத்தில் வாழ்பவர்க்கு அரசனின் (இந்திரனின்) பதம் இவையெல்லாம் அழியக்கூடியவை. ஆதலால் கழுத்திலே நஞ்சை வைத்து உயிர்களைக் காத்தவனாகிய சிவபெருமானின் உண்மைப் பதத்தையே எனக்கு அருள்க!

நூறு கோடி பிரமர்கள் நொந்தினர்
ஆறு கோடி நாராயணன் அங்ஙனே
ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்
ஈறி லாதவன் ஈசன் ஒருவனே. 5.100.3

என்ற அப்பரடிகள் அருள்வாக்கும்,

**விடங்கண்டம் வைத்தவன் மெய்ப்பத**
**மேயருண்; மேவுபுலத்**
**தடங்கண்ட நற்றில்லை வாழ்சிவ**
**காம சௌந்தரியே.** **7**

**சிற்பரை யேமயல் செய்யெழி**
**லாய்பிறந் தேயுழலும்**
**அற்பரை யேதுதி யாதருடாயா**
**யனைத்துந் தந்தும்**

---

தண்தேன் துளிக்கும் தருநிழற்கீழ் வாழ்க்கை வெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம்; வான்பதமும் கோது என்றே
கண்டேன்; பிறர்தம் பதத் தொலைவும் கண்டனனால்
தொண்டேன் சிவனே நின் தொல்பதமே வேண்டுவனே.

அல்லல் பிறவி அலம்; அலம்; விண்ணாடு உறைந்து
தொல்லைத் திருநுகரும் துன்பும் அலம்; அலம்; ஆல்;
தில்லைத் திருநடஞ்செய் தேவே! இனித்தமியேற்கு
ஒல்லைத் துயர்தீர்த்து உனதுபதந் தந்தருளே.

கோலம் நீடிய நிதிபதி வாழ்க்கையும் குறியேன்
மேலை இந்திரன் அரசினைக் கனவிலும் வெஃகேன்
மால்அயன்பெறு பதத்தையும் பொருள்என மதியேன்
சால நின்பதத்து அன்பையே வேண்டுவன் தமியேன்.

என்னும் கச்சியப்பரின் கந்தபுராணப் பாடல்களும் இங்கு நினைக்கத்தக்கன.

8. உலகின் தாயாக அனைத்துயிர்களையும் அளித்தும், மலையரசன் ஆகிய இமவான், மகளே என்று அழைக்குமாறு விரும்பி அவனிடம் வந்து வளர்ந்தருளிய மேலான பரம்பொருளாம் உமாதேவியே! உயிர் அறிவுக்கு எட்டாத

**வெற்பரை யன்மக ளேயென்**
**றழைக்க விரும்பிவருந்**
**தற்பரை யேதில்லை வாழ்சிவ**
**காம செளந்தரியே.** ८

**வந்தா தரியென மாயோன்**
**முதற்றே வரைவணங்கேன்**
**சிந்தா குலந்தவிர் திக்குவே**
**றில்லை திருவருளே**

---

பரம்பொருளாம் பார்வதியே! தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாம சுந்தரியே! மயக்கம் செய்யும் மாயையாம் அழகிய உடலோடு பிறந்து உலகில் வருந்துகின்ற அற்பர்களை அண்டிப் புகழாமல் (நின்னையே புகழுமாறு) அருள் செய்வாயாக!

மன்னுயிர் புவனம் ஏனை மற்றுள பொருளுக்கு எல்லாம்
அன்னையாய் உதவி நாளும் அவற்றினை வளர்த்து நிற்பாள்
தன்னையும் வளர்ப்பார் உண்டோ? வளர்ந்தது சழக்கே, அந்தக்
கன்னிதன் அருளின் நீர்மை காட்டினாள் போலும் அன்றே.

(சழக்கு=மாயம்) என்ற கந்தபுராணப் பாடல் நினைக்கத்தக்கது.

௯. திருவருளே! எம்தாயே! என்று தேவர்கள் போற்ற பெரிய கருணையைத் தந்து ஆளுகின்ற அழகிய தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாம சுந்தரியே! எழுந்தருளி என்னை ஆதரித்து அருள்செய்க எனத் திருமால் முதலாகிய தேவர்களை வணங்க மாட்டேன். என் துன்பங்களை நீக்கியருள்க. உன்னைத்தவிர வேறு ஆதரவு அடியேனுக்கில்லை.

எந்தா யெனவே யிமையவ
ரேத்த விருங்கருணை
தந்தா ளெழிற்றில்லை வாழ்சிவ
காம சௌந்தரியே. 9

பத்தியே தும்மிலாப் பான்மையேன்
பாசப் படுவலையுள்
கத்தியே யெய்த்தேன் கருனையி
னாண்டு கருதரிய
முத்தியே நன்கருள் மூவரும்
போற்று முதல்விபரா
சத்தியே நற்றில்லை வாழ்சிவ
காம சௌந்தரியே. 10

---

10. மும்மூர்த்திகளும் போற்றுகின்ற முதல்வியே! பராசக்தியே! நல்ல தில்லையில் எழுந்தருளியுள்ள சிவகாம சுந்தரியே! பக்தி சிறிதும் இல்லாத தன்மையனாகிய அடியேன், ஆணவம், கன்மம், மாயையாகிய பாசம் எனப்படும் வலையுள் அகப்பட்டு மீள முடியாமல் கத்தியே இளைத்தேன். நின் கருணையினால் எளியேனை ஆண்டு கொண்டு, எவரும் நினைக்க முடியாத பெரும் பேறாகிய முத்திச்செல்வத்தை நன்கு அருள்வாயாக!

## நூல் செய்த காலமும் உரையாசிரியரும்

எண்ணுஞ் சகாத்தம் பதினெட்டு நூற்றெட்டி லேய்ந்ததில்லை
நண்ணு நிரோட்ட யமகவந் தாதி நவின்றணிந்தேன்
பண்ணும் பதப்பொருள் யாழ்ப்பாணச் சுன்னைப் பதிப்பதியான்
கண்ணுங் கருத்தின் முருகேச பண்டிதன் கண்டனனே.

உ

இந்நூலுரையாசிரியரவர்கள் மாணாக்கராகிய
இயாழ்ப்பாணத்துச் சுன்னாகம்
ஸ்ரீ **அ.குமாரசாமிப்பிள்ளை** அவர்கள் இயற்றிய

## சிறப்புப் பாயிரம்

நடங்கன்னி காண நவில்வோற்
கிணையிதழ் நண்ணுகில்லா
இடங்கொண்ட மாமொழி யந்தாதி
மாலை யிணைத்தணிந்தான்
திடங்கொண்ட செந்தமிழ் முற்றுந்
தெளிந்தவன் செப்புந்தில்லை
விடங்கன் றனிலுறை வேற்சாமி
சூரி வெண்பாப்புலியே.

அன்றே துறைசையின் மீனாட்சி
சுந்தர வாரியன்பாற்
சென்றே யிலக்கிய லக்கணந்
தேர்ந்தவன் றில்லை நகர்
மன்றே நடிப்பவன் றன்னருண்
மேவிய மாரிமுத்து
என்றே யுரைக்கும் புலவன்
மரபுக் கிருஞ்சுடரே.

தென்னாருந் தில்லை நிரோட்டக
மாமிந்தச் செந்தமிழுக்
கெந்நாடுங் கைக்கொள நற்பொருள்
காட்டி யெடுத்துரைத்தான்

பொன்னா டெனக்கொளும் யாழ்ப்பாணச்
சுன்னைப் புரியிலுறை
என்னா சிரியன் முருகேச
பண்டித னின்புறவே.

மணிமாலை பொள்ளலும் பொன்மாலை
தேய்தலு மாமலரின்
கணிமாலை வாடலுங் கண்டிசை
வேலுச்சா மிக்கவிஞன்
பிணிமாலை நீங்கப் பெருந்தில்லை
வாணர்க்குப் பேசுமின்சொல்
அணிமாலை யன்பினொன் றாக்கி
மகிழ்வி னணிந்தனனே.

---

தில்லைச் சிதம்பரத்தைப் பற்றிய பழைய நூல்கள், மூலம் மட்டுமோ, உரையுடனோ யாரிடத்தில் இருந்தாலும், யாருக்குக் கிடைத்தாலும் அந்நூலையோ படி எடுத்தோ அடியேனுக்கு அனுப்பி வைத்தால் அடுத்தடுத்து வெளியிடும்போது அந்நூலைப் பதிப்புரையில் அவர்களுக்கு நன்றி கூறி மகிழ்வோடு வெளியிடுவேன் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.



திருவாவடுதுறை ஆதீனம் அருள்மிகு ஞானமா நடராசப் பெருமான்
புரட்டாசி வளர்பிறைச் சதுர்த்தசி திருநீராட்டு விழா - 03.10.2009
சீர்வளர்சீர் குருமகா சந்நிதானம் அவர்கள்
"பன்னிரு திருமுறைகளில் தில்லை" நூலை வெளியிட்டு
பதிப்பாசிரியருக்கு அருளாசி வழங்கி அருளல்